அகாரம் இலக்கத்தில் - அ, பின்சொன்ன ¹உகாரம் இலக்கத்தில் உ, இவ்விரண்டுமாய் தொகைக்கு- ௰, ஆயின.

யவ்வானது -ஜீவன், அந்தச் சிவனைச் சத்தியுஞ் சிவமுமாகக்கூடி ஆத்மாக்களை சிநேகத்தை வருவித்தது நவ்வானது திரோதாசத்தி இச்சிநேகத்தைமெய்யென் றழுத்தி மிகவும் இருதலையுண்டாக்கினது. மகாரமான துகிரியாசத்தி, இவை யிரண்டினும் பற்றுமல் நிற்கின் றது. யவ்வானது ஜீவன். இவை யிரணடும் விந்துநாத யானது இந்தஉருக்கத்தைச் சத்தி பெருளென் றறியாமல் நின்றது, கேவலமான இருள்எப்போதுபெறுவோ மென்ற விகாரம் சகலமான பகல் இவையிரண்டுக்கும் இரவுபகலென்றுபேர், இதுவன்றிஞானமுறைமைக்குச் சகலாவஸ்தை யென்றும் கேவலா வஸ்தை யென்றும் பேர்.

சிதம்பரத்திலே சிநேகமா யிருக்கையினலே பராபரமாகிய பரமேஸ்வரன் மானைப்பிடிக்க மான்வேடங் கொண்டதுபோல் இராப்பகலே குருவென்று வடிவெடுத்துக்கொண்டு ஆதிகபிலமாமுனிவர்திருவள்ளுவநாயனர் வடிவமாய்த் திருக் குருந்தீசுவராகிய திருமூலதேவருக்குத் திருவாய்மலர்ந்தருளிய உபதேச வைப்பாகும்,

சிவாயநமஃ

௨

# தோற்றமும் ஒடுக்கமும் அறியும்படி.

---*---

பராபரமாகிய பரமேஸ்வரன்
தராதலம்படைக்கத் தானினைந்தருளி.

பராபரத்திற் - பரந்தோன்றி, பரத்திற் - சிவந்தோன்றி, சிவத்திற் - சத்திதோன்றி, சத்தியில் - நாதந்தோன்றி, நாதத்தில்-விந்துதோன்றி, விந்துவில் - சதாசிவந்தோன்றி, சதாசிவத்தில் - மகேசுவரந்தோன்றி, மகேசுவரத்தில் - ருத்திரன்தோன்றி, ருத்திரனில் - விஷ்ணுதோன்றி, விஷ்ணுவில்-பிர்ம்மாதோன்றி, பிர்மாவில் ஆகாயந்தோன்றி, ஆகாயத்தில்-வாயுவுதோன்றி. வாயுவில் - அக்கினிதோன்றி, அக்கினியில், அப்புதோன்றி அப்புவில், பிருவிதுதோன்றி பிருதிவியில் - அன்னந்தோன்றி, அன்னத்தின் கண்ணே - நரமிருகபட்சி தாபரசங்கமாதிகள் தோன்றின.

இவ்விதமாய்த் தோன்றிய அடைவே நரமிருகபட்சி தாபரசங்கமாதிகள் அன்னசத்திலொடுங்கி, அன்னம் - பிருதிவியிலொடுங்கி, பிருதிவு-அப்புவிலொடுங்கி, அப்பு-தேயுவிலொடுங்கி; தேயு - வாயுவிலொடுங்கி, வாய்வு

ஆகாசத்திலொடுங்கி, ஆகாசம் - பிர்ம்மாவிலொடுங்கி, பிர்மா - விஷ்ணுவிலொடுங்கி, விஷ்ணு - ருத்திரனி லொடுங்கி, ருத்திரன் - மகேசுவரத்திலொடுங்கி, மகே சுவரஞ் - சதாசிவத்திலொடுங்கி. சதாசிவம் - விந்துவி லொடுங்கி, விந்து - நாதத்திலொடுங்கி, நாதஞ் - சத் யிலொடுங்கி, சத்தி - சிவத்திலொடுங்கி, சிவம் - பரத் திலொடுங்கி, பரம்-பராபரமாகிய பரமேஸ்வரனிடத் தில் ஒடுங்குமெனக்காண்க.

## அத்துவாதத்துவம்.

அன்னத்தில்-ரஸந்தோன்றி ரஸத்தில்-உதிரந்தோன் றி, உதிரத்தில்-மாம்சம்தோன்றி, மாம்சத்தில் - மேதை தோன்றி, மேதையில்-அஸ்திதோன்றி, அஸ்தியில்-மச் சைதோன்றி, மச்சையில் சுக்கிலந்தோன்றிசுக்கிலத்தில் சுரோணிதந் தோன்றியது.

இப்படித்தோன்றிய சுக்கிலசுரோணிதங்கள் அணுப் பிரமாணமுள்ள ஒருருபுபோலப்பாய்ந்துகுதித்துக்கண் டிப்பும் பேரிகையும்போலே கண்டித்து நடுவெளியில் ஒரு சுழிமுனையுண்டாய் அம்முனையினடுவே ஒரு துவா ரமுண்டாய் அத்துவாரத்தினடுவே இரண்டெழுத்துக ளாலே அபிமந்திரித்துப் பிண்டமாகியெழுமளவில்.

சுக்கிலம்பெருகில் - ஆணும், சுரோணிதம்பெருகில்-பெண்ணும், இந்தச்சுக்கிலச்சுரோணிதம் ரேகித்துப்பெருகில் இரட்டைபிண்டமாம், அப்பிண்டமானது நீர்வழியே பெருகில் - ஊமையாம், மலக்கிடையேயாகில் மந்தனும்.

இப்படிக்குக் கெற்பவுற்பத்தி கொள்ளுங்காலத்தில் இரதக்கலையென்றும் இரஸக்கலையென்றும் இரண்டு கலைகளுண்டு.

அவற்றுள் எரிகலையிலே பிராணேந்திரியம்பாயில் இடப்பாகங்கொண்டு கிருமியென்னும்புழுச்சென்று விழுங்காமல் கன்றோடு தாய்ச்சென்று தொடர்ந்தாற்போலே பிராணவாய்வை ஆத்துமா முன்னிட்டுக்கொண்டு சொல்லுமளவில் இசமகிதமென்னும் இரண்டட்சரமும் பின்தொடர்ந்து சென்று அச்சுக்குள்ளச்சாக அவ்வென்னு மூலாட்சரத்தில் அமைத்துப்புகவிட்டு கிழிச்சிலைவாசல்போலே ஓடி அங்கிஷாவென்னு மந்திரக்கயிற்றாலே சுருக்கிக் கட்டி சிவாக்ஞா சக்கரத்திடையிலே முத்திரையிட்டுதான் ஒருத்தியாய் நின்று இருந்தக் கருவை வளர்க்கும்படியாய் கெற்ப உற்பனத்தை உதானவாயுவான மூலவாயு வளர்க்கும்.

அது எப்படியெனில், கெற்பாகுதியென்னும் பவக் கடலில் எண்ணனவாயு வளர்க்கும்.

அது எப்படியெனில், எண்ணெயுந்தண்ணீரும்போல நிற்கிற சுக்கில சுரோணிதத்தைப் பாலும் நெய்யும் போலே பாய்ந்தவுடனே கற்பிக்குங்கற்பைச்சுருக்கிறாற்போலே வாசலையடைத்துக் கருவை வெளியாக்கிஒன்ருந்திங்களில் உதிரந் திரளும், இரண்டாந் திங்களில் கொழுந்துவிட்டு அச்சுஅமையும், மூன்ருவதில் மாமிஸந்திரண்டு மூட்டுருவாகும், நான்காவதிலோ பிண்டமாய் நரம்புநாடிகளமையும், ஐந்தாவதில் பஞ்சவன்னமாய் இந்திரியகாத்தால் அழியினும் அழியும், செழிக்கினுஞ் செழிக்கும், ஆருமாதத்தில் அதிர்புகுந்து ஆமையின்வடிவமுற்றுகால் கைகள் வகுக்கப்பட்டு நவத்துவாரங்களுமுண்டாகும், ஏழுமாதத்தில் கற்பத்திலிருந்து எழுந்து முழக்கமூறு கெற்பத்தைச் சூழ்ந்து புரளும், ஏனெனில் (எஉத) நாடிநரம்புகளும், ஆருதாரமும், ஐந்தெழுத்தும், ஐம்பத்தோரட்சரமும், பஞ்சபூததேவதைகளும், தூல சூக்ஷத்துடனே கொழுந்துவிடப் பேதையாம், எட்டாமாதத்தில் நீட்டிமுடக்கி தாயுண்ட அன்னசாரத்தைத் தொப்பளின் வழியாகவுண்டு

பிள்ளையினுடல் வளர்ந்து தாயுடன்தோன்றி உயிருடன்
ஆடும், ஒன்பதாவதில் தலை காலளவும ரோமத்துவார
முண்டாம், ரோமக்குருத்து அறிவுடனே உரங்கொள்
ளுகையில் விதனம் பொறுக்கமாட்டாமல் ஈசுவரனை
நோக்கித் தவஞ்செய்து தொழுகையுடனே பிரிந்து ஜன
னத்தை யொழித்தருளவேணுமென்று வணங்கி நிற்கும்
பத்தாவது மாதத்தில் நிறைந்த பிண்டமாய் மலைமேல்
நின்று தலைகீழாய் விழுந்தவர்களைப்போலே அபானவா
யுவின் பலத்தினாலே பூமியில் விழுந்தும் முன்னுள்ள நி
னைவுகளை மறவாதிருக்கும்.

இப்படி பரப்பிரமம் சிருஷ்டிப்பினாலே கர்ப்பந்தரி
த்து வாழ்வுபெறும்.

அப்பேர்ப்பட்ட பிராணவாய்வு வலப்புறமோடில்
ஆண்பிள்ளையாம், இடப்புறமோடில் பெண்பிள்ளையாம்
வாயுவிரண்டும் ஏகோபித்தோடில் அலியாம், அதாவது
பேடி-அல்லது குறியற்றது.

அந்தவேளையிலே நடந்த வாயு பேதியாமல் ஐந்துநா
ழிகை யளவும் நடந்திடுமாகில் அந்தப் பிள்ளைக்கு வ
யது ௱-அந்த அளவு குறையுமாகில் பிள்ளைக்கு வயதுங்
குறையும், வாய்வு நிரம்பி யோடில் அவயவங்களுண்டா

கும், அவ்வாய்வு சிதறியோடில் அவயவங்கள் குறையும் முதன்மையில் கெற்பராதனத்தில் போகிக்கும்பொழு து மூன்று குணத்திலே ஒன்றுவது மாதா பிதாக்களுக் குண்டானால் மக்களுக்கு முண்டாகும்.

அந்தவேளையில் வாய்வு நின்றியங்குமாகில் நிலத்தில் நிறமே பிள்ளைகளுக்கு நிறமாகும், மாதா பிதாக்களினு டைய மனமும் குணமும் வாய்வு மொன்றுகுமாகில்அந் தப் பிள்ளைக்கு மிகவும் அறிவுண்டாகும்.

மாதா பிதாக்களுக்கு அந்த மூன்று விதமுஞ்சிதறில் பிள்ளை மரித்துப்போம். கர்ப்பாசனத்தைவிட்டு கெற் பங்கவழியிலும் போக்கிலும் அக்கினி மிகுக்கிலும் வாய் வுகலங்கிலும் பலமாம். ஸ்திரீ புருஷர்களிருவருக்கும் மூலாக்கினி அதிகரித்தால் அந்தகர்ப்பஞ்சுவறிப்போம்.

இப்படி கன்மானுபவத்திற் கீடாக எடுக்கப்பட்டசரீ ரத்தில் முன் சொன்னவழியே அருந்தின அன்னகார மானது முப்பது நாழிகையில் எங்குற்றதெனில்.

மலஜல ரத்தமாகிய மூன்று கூறுகும், இதில் இராப் பகல் அறுபது நாழிகையில் மலஜலமென்ற இரண்டு கூறு கழிந்துபோம், மற்ற ஒரு கூறுகிய இரத்தமானது சரீரத்தில்தங்கும், அந்த இரத்தமானது எழி லொருபங்

கு இந்திரியமாம், மற்ற பங்குகளோவெனில், தோல் உரோமம்-சதை-கற்பம்-மேதை-அஸ்தி-குடும்பி-பூளை சுக்கிலம்-இடம்பு-குடல்-நரம்புமுதலிய விடங்களுக்குமுறையே, எ-நாழிகை வீதம் பரவி நிற்கும்.

இனி இந்தச் சரீரத்தில் இருவினைக்கதவுங்கூட்டி மூலத்தண்டாகிய நெடுங்கயிற்றை முகட்டுவளையாகச்சேர்த்து பழுவெலும்பாகிய வரிசையிட்டு நரம்பாகிய யாக்கையாலே கட்டி உதிரமாகிய ஜலத்தாலே மண்கூட்டிச் சுவரேற்றி ரோமமாகிய கத்தையாலே மேய்த்து எடுக்கப்பட்ட வீட்டுக்கு நவத்துவாரமென்னும் வாசலிட்டு, அச்சமாகிய கதவுகளிட்டு, பல்லாகிய தாள்பூட்டி நாவாகிய ஓங்காரம்பாய்ச்சிப் பண்டமாகிய பஞ்சேந்திரியங்களு முடைத்தாய் நிற்கும்.

இந்தச் சரீரத்தில் பதினறு கதவுபூட்டியவீணைத்தண்டும் மொழியென்னு மூச்சாணெலும்பும்,மூச்சாண்சதையும், அஞ்சுருவும், ஆறு தெருவும், ஏழு கடலும், எட்டு தூணும், நாலுசாண் பருமனும், எட்டுச்சாண் நீளமும் முப்பத்திரண்டுமுழக் குடலும் இருக்கும்.

இது மூலாதாரத்தைத்தொட்டு ஆக்ஞையளவும் பெரு நரம்புகள் (௭௨௪) சிறு நரம்பு (௭௨௪) கையிலும் கால்வி

லும் பெருநரம்பு (எதி) சிறு நரம்பு (எ௨௰) நாபிதானத்தில் பெருநரம்பு (௬) சிறுநரம்பு (௨௰) நவத்துவாரத்துக்கும் வாசல் கூ-க்கு பெருநரம்பு (105½) சிறுநரம்பு (௬௰௫௱) முடிவில் பெருநரம்பு (௬௰) சிறுநரம்பு (௬௰) எலும்பிலுங் குடலிலும் சிறுநரம்பு (எ௰) ஆக நரம்பு நாடி (எ௰௨௰)

இனி கால்களிலும் கைகளிலும் சந்துப்பொருத்தல் (௬அ) கழுத்துக்குக் கீழ்ச்சந்து (அ௬) கழுத்துக்கு மேற்சந்து (அ௬) ஆக சந்து பொருந்தல் (௬௬எ.)

இனிநாசியில்ஜலம்-பலம் (௪௧) எலும்பில்ஜலம்-பலம் (எ)மாம்சத்தில்ஜலம்-பலம்(௨௧)ஆகஜலம்-பலம் (௬௬.)

காலிலும் கையிலும் எலும்புகள் (௱௬௰) மூலாதாரத்தைத் தொட்டு ஆக்கினையளவும் மொழியெலும்பு (௬௰) கழுத்துக்குமேல் பொடியெலும்பு (3½) இருபக்கத்திலும் எலும்பு (௨௰) ஆக எலும்பு (1056)

இனி சரீரத்தில் (3½) கோடி ரோமத்துவாரங்களும் நாளொன்றுக்கு (௨௧௰௬௱) சுவாசமும். ௬௬) தத்துவமும், (௬௬௰) பலம் மாம்சமும், உழக்குபித்தமும், ஆழாக்குச் சேத்துமமும் கூடி சரீரத்திலே நாளொன்று

க்குநடக்கும் பிராணவாயுவு (௰௨) விரல் பிரமாணம்புற ப்பட்டு நாலுவிரல் பிரமாணங் கழிந்துபோய் (அ) அங்குலம் உடம்பூடுருவி சப்ததாதுகளை வளர்க்கும்.

## இனி சீவராசிகளின் வாழ்நாளின் விவர மெப்படியெனில்.



வயதளவு ௱-க்கு ௰-வயதளவும் இளமை, ௨௰ - வயதினளவும் வாலிபம், ௨௫-௩௰-௪௰-இதுவரையில் யௌவனம்: ௪௫-௫௰-இவைகளில் சவுமாரதிசையடைந்து ஒளி மழுங்கலுற்று பிரிதிவு அப்புவை நெருக்கும், அறுபதில் அப்பு தேயுவை நெருக்கும். எழுபதில் தேயுவாயுவை நெருக்குதலினால் தாது மாயாவுணர்வுபண்டுபோலே செலுத்தும், எண்பது வயதில் வாயுவு ஆகாசத்தை நெருக்கும், தொண்ணூறுவது வயதில் ஆகாசம் ஆத்துமாவை நெருக்கும், அதனால் மலஜலம் இடைவிடாமல் ஒத்து நிற்கும், நூறுவது வயதில் ஆத்துமா வந்தவழியை நோக்கும்.

இப்படிப்பட்ட சரீரமானது முன் சொன்னஅறுதிங்களில் முந்தாமல்சற்குருவின் தாளே சரணமென்றுதிரு

க்குருந்தீசுரர் ஆதி திருமூலதேவருக்கு திருவுளம் பாறி யருளிய முறைமை கூறினோம்.

தோற்ற வொடுக்க முற்றும்.

---

## அத்துவாதத்துவ கலைக்கிஞானம்.

அட்சரம் - ஆகாரம் - கரணம் - அவஸ்தை - பொறி - புலன் - இளமை - வறுமை - வேகம் - புராணம்- சரிகை - கிரிகை - யோகம் - மெய்ஞ்ஞானம் - இவ்விதமென்று குருவருள் செய்யச் சீடன கேட்டுத் தெளிந்து அருட்பிரகாசத்திலே சர்வ அஞ்ஞானங்களையும் ஞானக்கினியினுலே சுட்டுப்போட்டு களிப்புற்று சிவத்துடனே நின்று தெளிவுறவே யெப்போதும் சிவஞானியென்று ஒட்டியாணம் பூட்டி ஆனந்தமென்னும ஞானமிர்தத்தையருந்தி ஓம் நமாவென்னும் ஞானமுத்திரை யிட்டு அழியாப்பதவியாக மோட்ச சாம்பிராச்சியத்தை யடைபவருக்கே சீவன் முத்தரென்று பேராம்

இப்படிப்பட்ட பெருமையை யடையு மவர்களுக்குப்பரகதி கிடைக்காததற்குக் காரண மேதோவெனில்.

## பரகதிக்கு விலகல்.

சாயாபுரி யென்னும் பட்டணமும், அந்திர சூத்திர மென்னும் உட்கோட்டையும். நவத் துவாரமாகிய வாசல்களும், இரணமென்னு முகப்பும். சுவாதிஷ்டானம், மணிபூரகம், அநாகதம், விசுத்தி, ஆக்ஞை என்னும் அரண்களும் அக்கினிமண்டலம், ஆதித்தமண்டலம், சந்திரமண்டலம், ஆகிய சொற்கமத்திய பாதாளமாகிய லோகங்களும், அங்கராஜன் மூர்க்கராஜன் என்னும் இரண்டு ராஜர்களும். மூலப்பிரகிருதி யென்னுந் துன் மந்திரியும். பஞ்சபூதர்களென்னும் பிரதானியர்களும் அலகை யென்னும் வீதிகளும். இச்சாசத்தி கிரியாசத்தி யோகசத்தி ஞானசத்தி பராசத்தி யென்னுட் ஊழியக் காரிகளும். அசவையென்னும் அடப்பக்காரனும். கொர் விதனென்னும் களாஞ்சிக்காரனும், காலகர்மனென்னும் தளவானும். மனம் - புத்தி-சித்தம்-அங்கார மென்னும் காணிக்காரனும், மாயாப்பிரபஞ்ச மென்னும் வன்னிநாயகப்பாடிகரும், சத்த. பரிச, ரூப, ரச, கந்த மென்னும் கொல்நாயக்கர்களும், காம, குரோத, லோப. மோக

மதமாச்சரிய, இடும்பை, ஆங்கார மென்னும் கள்ளரும், இதயகித மென்னும் மல்லர்களும், ஆணவம், மாய்கை, காமியம் என்னும் கோட்டைக்காரரும், வாக்கு, பாதம், பாணி, பாயுரு உபஸ்தம் என்னும் கன்னக்காரரும், சாக்கிர, சொப்பன, சுழுத்தி, துரிய, துரியாதீத மென்னும் தலையாரிகளும், அன்னமய, பிராணமயம், மனோமயம், விஞ்ஞானமயம், ஆனந்தமய மென்னும் காலாட்களும், வாயு, தேயு வென்னும் புரவிகளும், மனோபதியென்னும் கர்ணிகனும், நவகோடி யென்னும் ராவுத்தனும், இருதயபாதமென்கிற தானைபதிகளும், சதகோடி மகாமந்திர மென்னும் உபதளமும், வாத பித்தசேத்துமமென்னும்பரிவாரமும், அஷ்டமத மென்னும் யானைகளும், நாலு வேத மென்னும் ரதங்களும், அசுத்தம் சுத்தமென்னும் தேவியரும், இருவினை யென்னும் தோழிகளும், இவர்கள் யாவரும் கூட்டமாகக் கூடிக்கொண்டு தங்களில் தாங்களே ஒருவருக்கொருவர் ஒப்புரவற்றவர்களாய் முன்னுரைத்தகாயாபுரிக் கோட்டையை வளைந்துகொண்டு ஒன்பது வாசலுக்கும் அஷ்டமத மென்னும் யானைகளை விடுத்து யுத்தஞ் செய்கையில் ஒருவருக்கொருவர் தங்களால் இந்தக் கோட்டையை ஆளுகிறதற்கு சாத்தியப்படாமல் காரிய உபாதியாலும்

காரண உபாதியாலும் ஸ்தூலசூக்ஷமாதி தேகத்தி
லும்சதுர்விதோபாயத்தினாலும் ஆராய்ந்து இந்தக் கோ
ட்டையைக்கைக்கொள்ளும்படி பராபரமா யிலங்குகி
ன்ற சற்குரு நாதன் மானைப் பிடிக்க மான் சட்டை யு
டுத்ததுபோல திருநந்திதேவரான சற்குருநாதர் ஆதி க
பிலராகிய திருவள்ளுவராய் திருமூலதேவருக்குத் திரு
வாய்மலர்ந்தருளியவாறு இதய மென்னும் வில்லுக்கு
ப் புரியென்னும் நாணைப்பூட்டி அறிவு யென்னும்
அம்பைத்தொடுத்து குரு வென்னும் இலக்கு நோக்கி
மூலாதாரத்தின் இரண்டு நாகு நெட்டெழுத்தின் நடு
நடுத் தெழுத்திலே யிருந்து வங்கென்ற வளைத்து சங்
கென்ற சன்னிதனாய் அங்கிஷாவென்றியங்குவித்து சங்
கென்று ஆக்ஞையா சக்கரத்திலே புகுந்து அக்கினி
மண்டலத்தில் அனைவரையுங் காண்பித்துக்கொண்டு
ஆயாவானென்னும் இடையிங்கலை இரண்டுக்கும் படி
க்கதவிட்டு ஆதிமூல மென்னும் யானையின்மேற் கொ
ண்டு தண்டுக்குந் தனுவுக்கும் நடுக்குத்தென்னுங் குரசுக்
கயிற்றுக் குள்ளாக அன்னதானத்தி லுற்றளவில் அங்
கென்று மேருக்கி ஆதி காலமும் அவ்வையும் பதியுங்
கொண்டு நடுவென யென்னும் ருத்திராக்கினியான பன்
னிரு சமுத்திரத்திலே ஆனையை நீராட்டுவித்து ஞான

பர மென்னும் காவணமிட்டு அங்கென்று மேனோ க்கி யுற்றளவில் சித்திரநாடி வழியே சென்று சந்திராபு ரியென்னும் மண்டலமுங் கொண்டு அக்கினிமண்டலத் தில் அஞ்செழுத்திலேயும் ஆதித்த மண்டலத்தில் மூன் றெழுத்திலேயும் சந்திரமண்டலத்தில் ஒரெழுத்திலே யும் ஆசனமாயிருந்த பிறகு திரிமண்டலாதிபன் பின்னி ட்டு மந்திரியுபதேசப்படி வைத்துக் காயாபுரியென்னும் பட்டணத்தைக் கொள்ளாமற் கொண்டு, அதிகாய னெ ன்னும் பிரபஞ்சங்களை யெல்லாம் சருவோடறுத்து பி ன்பு சத்திய ஞானப் பிரகாசமான மணிதிருத்தேரிலே யெழுந்தெருளிய பின்பு அறிவுகந்து நரலோகங்கொண் டருளிய பின்பு காயாபுரியை நோக்கி திருநந்திதேவர் ஆதி கபிலாமஹாரிஷி திருவள்ளுவர் சாக்ஷியாகத் திரு மூல தேவருக்குத் திருவுளம்பற்றி யருளிய முறைமை யிலே திருமூலதேசிகர் நின்று நகைசெய்தளவில் காயா புரி பட்டணத்தில் யோகாதியுங் கெட்டு இரவ கெந்து ருவ பதாதி சேனையும் பட்டு ஆயாக்கினி வேந்தனும் சிறப்புண்டுபோய் காயாபுரியென்னும் பட்டணத்தில் சொர்க்கமத்திய பாதாளலோகமளவாக திருவடிவைத்து க்கொண்டு ராச்சியஞ் செய்தபடிக்கு திருநந்திதேவர் ஆதி கபிலமகாரிஷி திருவள்ளுவர் சாட்சியாகத் திருமூ

லசேவருக்கு அபயாஸ்தமுங்கொடுத்தருளி அபிஷேக முஞ் சூட்டி சித்தாந்தமும் வேதாந்தமுங் கடந்த நாதா ந்த முடிவான அமூர்தபஞ்சாட்சர திருவநிலையில் சூக்ஷம் புகட்டி இப்படி யுணர்த்தியருளிய முறைமை யை உட்படுத்தேடாதவன் சிவஞானி யல்லவென்று இந்த முறைமை உட்படுத்தேடின பெரியோர்களுக் குப் பராபரத்தில் உத்தரங்களும் வெளியாயிருக்கும்.

பிண்டத்திற் கண்டபொருள் அண்டத்திற் காணலா ம் அண்டத்திற்குள்ளது பிண்டத்து முண்டெனக் கொள்க.

ஆ று தா ர

ஜீவோற்பத்திசிந்தாமணி.

மு ற் று ம்.

---

சிவமயம்.

# தத்துவ தீபிகை.

## சரீரத்தினளவு பிரமாணாதிகளின்விவரம்.

இந்தச் சரீரமானது அவரவர்கள் கையினால் ௮ - சாண் நீளமும், ௪ - சாண் பருமனும், அல்லது ௯௬ - விரற்கடை பிரமாணமு முள்ளது.

இதற்குள் ௯௬ - தத்துவங்க ளடங்கியிருக்கின்றன.

## அவை யாதெனில்.

வாசல்கள் (௯) பொறி (௰) புலன் (௰) ஆதாரம் (௬) மண்டலம் (௩) நாடி (௰) வாய்வு (௰) தாது (௭) இராகம் (௮) கோசம் (௫) கரணம் (௪) அவஸ்தை (௫) குணம் (௩) மலம் (௩) வியாதி (௩) ஆக (௯௬.)

## இவைக்கு - விவரம.

செவிகள் (௨) கண்கள் (௨) நாசிகம் (௨) வாய் (௧) குய்யம் - பெண்குறி அல்லது ஆண்குறி (௧) குதம் அல்லது அபானவாயு (௧) ஆக வாசல்கள் (௯.)

சுரோத்திரம் (௧) தொக்கு (௧) சட்சு (௧) சிங்குவை (௧) ஆக்ராணம் (௧) ஆகபொறிகள் (௫.)

## இவைகளி னியற்கையாவன.

சுரோத்திர மென்பது -செவி, இது ஆகாசத்தினிடமாய் நின்று சத்தத்தை யறியும்.

தொக்கு என்பது - உடம்பு, இது வாயுவினிடமாய் நின்று பரிசத்தை யறியும்.

சட்சு வென்பது -கண், இது தேயுவினிடமாய்நின்று ரூபத்தை யறியும்.

சிங்குவை யென்பது -நாக்கு, இது அப்புவினிடமாக நின்று ரஸத்தை யறியும்.

ஆக்ராண மென்பது - மூக்கு, இது பிருதுவியினிடமாக நின்று கந்தத்தை யறியும்.

இவைகளை ஞானேந்திரிய மென்னப்படும்.

——(*)——

## கன்மேந்திரிய மாவன

வாக்கு, பாதம், பாணி, பாயுரு, உபஸ்தம் ஆக-ரு.

இவைகள் முறையே வசனம், கமனம், தானம், விசாகம், ஆனந்தம் இவைகளாம்.

ஆகாசத்தினிடமாக நின்று வசனிப்பது, வாக்கு
வாயுவினிடமாக நின்றுகமனிப்பது, பாதம்
தேயுவினிடமாக நின்று இடல்எற்றலான, பாணி
அப்புவினிடமாக நின்று சலமலாதி கழிதல் பாயுரு
பிருதிவியினிடமாக நின்று ஆனந்திப்பது, உபஸ்தம்

இவைகள் கர்மேந்திரியங்களாம்

---

## தன்மாத்திரைகளாவன

சத்தம் - பரிசம் - ரூபம் - ரஸம் - கந்தம்; ஆக - ரு.
சத்தமானது - ஆகாசத்திலும் செவியிலு மொடுங்கும்
பரிசம் - வாயுவிலும் உடம்பிலு மொடுங்கும்
ரூபம் - தேயுவிலும் கண்ணிலுமொடுங்கும
ரஸம் - நீரிலும் நாவிலும் ஒடுங்கும்
கெந்தம் - பிருதிவியிலும் மூக்கிலும் ஒடுங்கும்
வசனம் - வாக்கிலும் ஆகாசத்திலும் ஒடுங்கும்
கமனம் - வாயுவிலும் காலிலும்ஒடுங்கும்
தானம் - தேயுவிலும் கையிலும்ஒடுங்கும்

விசாக்கம் - அப்புவிலும் முகத்திலும் ஒடுங்கும்
ஆனந்தம் - பிருதிவியிலும் குய்யத்திலும் ஒடுங்கும்
ஆக பொறி (ரு) க்கும் புலன்கள் (ரு)க்கும்
விவர மிதுவாம்.

---

## ஆதாரமாவன

மூலாதாரம், சுவாதிஷ்டானம், மணிபூரகம், அனாகதம் விசுத்தி, ஆக்ஞை இவைகளாம்

### இவைகளின் விவரம்.

மூலாதாரமாவன.—காலெலும்பு உடன் கதிரெலும்பு டங்கூடிய இடங்குய்யம், குய்யத்துக்கும் குதத்துக்கு ம்நடுவே குண்டலி வட்டமாய் அந்தவட்டத்துக்குநடுவே திரிகோணமாய் அந்ததிரிகோணத்துக்கு நடுவே நாலி தழுடைய ஒருபுட்பவட்டமாய் கடப்பம்பூப்போன்றிரு க்கும் அந்தப் புட்பத்துக்கு நடுவில் ஓங்கார வெழுத்து நிற்கும் அந்த ஓங்காரத்திற்கு நடுவில் விக்னேஸ்வரனு ம், வல்லபை சத்தியும் எழுந்தருளி யிருப்பார்கள், பச் சை நிறமுள்ளது, அந்தநாலிதழிலும் நிற்கும் அட்சரங்க ளை இதற் கடியில் வரும் மூலாதாரசக்கரத்திற் காண்க

## இதற்குப் பிரமாணம் திருமந்திரம்

மாமலர் காலையும் வட்டத்தின் மேலிடு
மாமலர் காலிலும் வவ்வா திசவ்வடி
மாமலர் காலிலே வட்டத்தி னுள்ளே
ஓமென விநாயகன் உலாவிநின் றனே
ஒருவீடு வாசற் றிருவீடு மேலே
கருவீடு வாசற் றிருவிரல் கீழே
உருவீடு சோதியு மங்கே யுதித்தன
திருவுடை யாரிது தேர்ந்தறி வாரே
இட்டா னறிந்திலன் எத்தாளுங் கண்டிலன்
தட்டா னறிந்தான் ஒருவர்க் குரைத்திலன்
மெட்டாய் வளர்ந்து அதின்மேல் விநாயகன்
அட்டாங்க யோகத் தமர்ந்திருந் தானே
ஓங்கார மென்னும் அவளொரு பெண்ணும்
றீங்காப் பச்சை நிறமது கந்தவள்
ஆங்கார முடன் ஐவரைப் பெற்றவள்
ரீங்கா சனத்தி விளிதிருந் தானே.

இவை யெல்லாம் அவ்விடத்தில்
தோன்றுவதுபோ லிருக்கும்.

## இதற்கு இரண்டு விரற்கடைக்கு மேலிருப்பது சுவாதிஷ்டானமாம்

அது நாற்சதுரமும், அச்சதுரத்தினடுவே ஆறிதழ்களையுடைய ஒரு புட்ப வட்டமும், அதன் மத்தியிலே லிங்க பீடமும் வீணாத்தண்டி னடியுமா யிலங்கி அதினடு மத்தியிலே நகார எழுத்து நிற்கும்.

அந்த நகாரத்தி னடுவில் பிர்ம்மாவும் சரஸ்வதியும் வீற்றிருப்பார்கள்.

இது பிருதிவியின் கூறாகும், பொன்னிறமாம், அந்தப்புட்பத்தின் ஆறிதழிலுமுள்ள அட்சரங்களை இதற்கடியில் வரும் சுவாதிஷ்டான சக்கரத்திற் காண்க.

இது—சுவாதிஷ்டானமாம்.




கர்ச்சதுரம்
ஆறிதழ்கமலம்
செம்பொன்னிறம்
பிர்ம்மா
சரஸ்வதி
நகாரம்.

இவையெல்லாம் அவ்விடத்தில்
தோன்றுவதுபோலிருக்கும்.

இதற்கு(௮)விரல் பிரமாணத்துக்குமேல் இருப்பது மணிபூரகமாம், இது கோழிமுட்டைபோல (௧௮) நரம்பு நாடிகளும் சூழ நாடிக்கெல்லாம் வேருள்ளது, இதை உள்ளறிவுள்ளோர் உந்திக்கமல மென்று சொல்லுவார்கள். இது தொப்புளுக்குநேரில் அப்புஸ்தானத்தில் எழாம்பிறைக் கிணங்கியிருக்குமாம், இதினடுவே பத்து இதழையுடைய ஒரு புஷ்பம் வட்டமாயிருக்கும், அந்த புஷ்பத்தி னடுவில் மகார வெழுத்து நிற்கும், அந்த மகாரத்திற்கு நடுவில் மகாவிஷ்ணுவும், மகாலட்சுமியும் எழுந்தருளியிருப்பார்கள். பளிங்கு நிறமுமுள்ளது. அந்தப் பத்திதழிலும் நிற்கின்ற அட்சரங்களை இதற்கடியில்வரும்மணிபூரகச் சக்கரத்திற் காண்க.

இது—மணிபூரகம்.



மூன்றாம்பிறை
பத்திதழ் கமலம்
மரகதநிறம்
விஷ்ணு
லட்சுமி
மகாரம்.

இவையெல்லாம் அவ்விடத்தில்
தோன்றுவதுபோ லிருக்கும்.

---

இதற்குமேற் பத்து விரற்கடை பிரமாணமுள்ள இடத்துக்கு மேல் உள்ளது அநாகதமாகும், இது இருதய கமலமாம், தேயுஸ்தானத்தில் முக்கோணமா யிருக்கும், அந்தமுக்கோணந்தி னடுவில் பன்னிரண் டிதழையுடைய ஒரு புட்பவட்டமா யிருக்கும். அந்தபுட்பத்தினடுவில் சிகாரவெழுத்து நிற்கும், அந்த சிகாரத்தினடுவில் ருத்திரனுமபார்வதியும் அமர்ந்திருப்பார்கள், அக்கினி நிறத்தையுடையது. அந்தப்பன்னிரண் டிதழிலுமுள்ள அட்சரங்களை இதற்கடியில் வரும் அநாகத சக்கரத்திற் காண்க.

# இது—அநாகதமாம்.



பனிரண்டிதழ்க்கமலம்
முக்கோணம்
[illegible]
[illegible]
[illegible]
சிகாரம்.
இவையெல்லாம் அவ்விடத்தில்
தோன்றுவதுபோ லிருக்கும்

இதற்குத் பத்து விரற்கடை பிரமாணமுள்ள இடத்துக்கு மேலுள்ளது விசுத்தியாம், இது கண்டஸ்தானத்திலே வாயுவஸ்தானத்தி லுள்ளது, அறுகோணமா யிருக்கும், அந்த அறுகோணத்தி னடுவில் பதினாறி தழையுடைய ஒரு புட்பவட்டமா யிருக்கும், அந்த புட்பத்தினடுவே வகாரவெழுத்து நிற்கும், அந்த வகாரத்தி னடுவில் மகேஸ்வரனும் மகேஸ்வரியும் எழுந்தருளியிருப்பார்கள், சறுநிறத்தையுடையது, அந்தத் பதினாறிதழிலுமுள்ள அட்சரங்களை இதனகடியில் வரும் விசுத்தி சக்கரத்திற்காண்க.

இது—விசுத்தி.



பதினாறிதழ் கமலம்
அறுகோணம்
மேகநிறம்
மகேஸ்வரன்
மகேஸ்வரி
வகாரம்.

இவையெல்லாம் அவ்விடத்தில்
தோன்றுவதுபோ லிருக்கும்.

---

இதற்கு (௰உ) விரற்கடை பிரமாணமுள்ளஸ்தானத்துக்கு மேல்ஆக்ஞைலலாடபீடத்தி லிருக்கின்றது வீணாத்தண்டின் முடியுமாய் ஊர்த்துருவி பொன்போன்றவடிவ முற்று நிற்கும், நெற்றிப்புருவத்தின வெளியாய் அந்த ஸ்தானத்தில் மூன்றிதழையுடைய ஒரு புட்பத்தினோடு கூடிய யகார வெழுத்தோ டிணங்கி நிற்கும். அந்த யகாரத்துக்கு நடுவில் சதாசிவமும் மனோன்மணியும்எழுந்தருளியிருப்பார்கள், மேகநிறத்தை யுடையது. இதிலுள்ள அட்சரங்களை இதற் கடியில் வரும் ஆகனை சக்கரத்திற்காண்க.

இதற்குத் திருமந்திரம்.

ஐம்பதெழுத்தே அமர்ந்த வேதங்கள்
ஐம்பதெழுத்தே ஆகமங்கள்
[illegible] அறிந்தபின்
[illegible]த்தே ஐஞ்செழுத்தாமே.

---

## இது—ஆக்ஞை.



கூஷ

ஹயஉ

மூன்றிதழ் கமலம்

வட்டம்

படிகநிறம்

சதாசிவம்

மனோன்மணி

யகாரம்.

இவையெல்லாம் அவ்விடத்தில்
தோன்றுவதுபோ லிருக்கும்.

---

## ஆரு தா ர விவ ரம்

மூலகாரணனு யிருக்கும் இந்தப் படத்தில் சங்கை நேரிடுமேயானல் அகமும் புறமும் ஆராய்ந்துபார்த்தால் தெரிய வரலாம்.

## திருமூலர் திருமந்திரம்.

ஒருவிடுவாசலுக் கிருவிரல்மேலே
கருவிடுவாசலுக் கிருவிரல்கீழே
உருவிடச்சோதியும் உணர்வதுமங்கே
திருவுடையாளிது சேர்ந்தறிவாளே.

---

### மூலாதாரம்.

க. குதத்திற்கும்
லிங்கத்திற்கும் நடு.

### சுவாதிட்டானம்.

உ. லிங்கத்திற்கும் நாபிக்கும் நடு
௩. நாபிக்கமலம்
௪. இருதயகமலம்

ரு. கண்டத்தானம்
சு. லலாடத்தானம்

## சந்திரமண்டலம்.

எ. மூலாதாரம் தொடங்கி ஒவ்வோரெழுத்தை முன்னிட்டுக்கொண்டு சிரசு நடுவே கோடி சூரியர் உதய மானாற்போல பிரகாசிக்கும், இந்த அமிர்தகலை அக்கினி மண்டலத்தை நோக்கி ஜோதியாய் நிற்கும்.

## ஆதித்தமண்டலம்.

அ. இருதய கமலத்தில் அறுகோணமாய் எட்டி தழுடைய ஒரு புஷ்பமா யிருக்கும் இதில் வாழைப் பூப்போல் கீழ்நோக்கி யிருக்கும்.

## அக்கினிமண்டலம்.

கூ. பிரிதிவும் அப்பும் கூடின விடத்தில் நாற் சதுரமாய் நடுவே முக்கோணமாய் நாலிதழு டைய ஒரு புஷ்பமா யிருக்கும்.

இதுவே ஆறுதார விவரமாம்.

## இனி—மண்டலங்களாவன.

அக்கினி மண்டலம், ஆதித்தமண்டலம், சந்திரமண்டலம், ஆக(௩)

இதில் அக்கினி மண்டலமானது மூலாதாரத்திற்கு இரு விரற்கடைக்கு மேலிருக்கின்றது.

ஆதித்தமண்டலம் - உந்திக்கு நாலு விரற்கடைக்கு மேலிருக்கின்றது.

சந்திரமண்டலம் - கோடி சந்திர சூரியர்களுதயமானது போல சிரத்தி னடுவில் நிலையாய் நிற்கும், இதை அமுர்தகலை யென்று சொல்வது முண்டு, அமுர்தம் மேல் நோக்கி அக்கினி கீழ் நோக்கி சரியாய் நிற்கும், இதற்கு நடுவில் பராசத்தி எழுந்தருளி யிருப்பாள், இதற்குப் பிரமாணம்.

### திருமந்திரம்.

மேலைநிலத்தில் மேதகுபெண்ணே
மூலநிலத்தில் முளைத்தெழுஞ்சோதியே
ஏலவெழுப்பி யிசைந்துசந்திக்க
பாலருமாவார் பார்நந்தி ஆணையே.

## இனி நாடி (ய) க்கும் விவரம்.

இடைகலை, பிங்கலை, சுழிமுனை, காந்தாரி, அத்தி உசா, அலம்புடை, புருடன் குகு சிங்குனி. ஆக நாடி - ய,

இவைகளில் இடை - பிங்கலை - சுழிமுனை இம்மூன்றும் மூலாதாரத்தைத் தொட்டு ஆருதாரம் ஆறிலும் மண்டலம் மூன்றிலும் ஊடுருவிமுட்டி நின்று இடை பிங்கலை இரண்டும் சுழிமுனையிலே இணங்கி கத்தரிக்கோல்போல்பாகமாறி வீணாத்தண்டுக்கு வில்லுநாணிட்டாற்போல கபாலத்தை முட்டி குதிரை முகமுற்று நாசியுளவும்பற்றி நிற்கும்.

இம்மூன்று நாடியும் இப்படிநிற்க காந்தாரியானது நாபி ஸ்தானத்தில் தோன்றி எழு வகையாகப் பிரிந்து இச்சா சொருபமாய் கண்டத்தைப்பற்றி நாடியுளவும் நிற்கும்.

அத்தி-உசா இவ்விரண்டும் பத்து நாடியாய்ப் பிரிந்து கண்களிரண்டிலும் பற்றி நிற்கும்.

அலம்புடை புருடன், பன்னிரண்டுநாடியாகப் பிரிந்து தேகத்திலுண்டாகிய எலும்பு நரம்பு உரோமம் இ

வைகளில் பரவி பாகமாறி வலதுஇடது செவிகளைப்பற்றிநிற்கும்,

குகு வென்பது - நாபிஸ் தானத்திலே தோன்றி, குத்தத்தைப்பற்றி நிற்கும்.

சிங்குனியோ வெனில் நாபியிலே தோன்றி, குய்யத்தைப்பற்றி நிற்கும், இவைகளில் (உகூ) நாடியுற்பத்தியானது காண்க.

## இனி—வாயுக்களாவன.

——(*)——

பிராணன், அபானன், வியானன், உதானன், சமானன், நாகன், கூர்மன், கிரிகரன், தேவதத்தன், தனஞ்சயன் ஆக வாயு-௰.

[illegible] டன் வயிரவன், முக்கியன், அந்தரியாமி, பிரவஞ்சனன் ஆகிய நான்கும் சேர வாயுக்கள்-௰௪.

## பிராணவாயுக்களாவன.

பிராணவாயுவானது லலாடமத்தியிலேதோன்றிசித்திரரமை [illegible] ல விழுந்து மூலாதாரத்திலே ஓம் - என [illegible] உதி [illegible] க்கரத்திலே ரீம்- என்று முட்டி இடைகலை பிங்கலைகளிலே ஓடி கபாலத்தைச் சுற்றிநாசியி

வழியாய்ப்புறப்பட்டு நான்கு விரற்கடை பிரமாணங் கழிந்துபோய் எட்டு விரற்கடை பிரமாணம் மிய்ந்து தானின்றஸ்தானத்திலேயே தாக்குகின்றது.

இப்படி தாக்குவது உத்தமதேசிக்கு நாழிகை ஒன்றுக்கு முன்னூற்றறுபது சுவாசமாகக் கொல்லன் துருத்திக்குட் காற்றேறுவதுபோல ஏறும்.

இப்படி ஏறுகின்ற சுவாசமானது இராப்பகலாகிய அறுபது நாழிகை யுள்ள நாள் ஒன்றுக்கு (உகதகூ00) சுவாசமாச்சுது, இவ்விதமா யிணங்கி யவற்றுள் எதஉா சுவாசம் வெளிப்படும், மற்றவை உள்ளடங்குமென்றறிக.

அபானவாயுவானது, குதத்தையுங்குய்யத்தையும்பற்றி மல மூத்திராதிகளைக் கழித்துவிடும்.

வியானன், தோளிலே நின்று பரிசங்களை யறிவித்துக் கலைகளை நிறைவிக்கும்.

உதானன், உதராக்கினியை யெழுப்பி உண்ட அன்னசாரத்தை நாடிகளிற் செலுத்திச் சரீரத்தை வளர்க்கும்.

சமானன், இவை யாவையும் சமப்படுத்தி பேதமில்லாமல் நிரவலாகி வைக்கும்.

கூர்மன், நகைப்பும் முக லட்சணமும் கண்களிப்பும் புளகமும் மயிர்க் கூச்சலும் கொட்டாவியு முண்டாக்கும்.

நாகன், முக்கலும் சோம்பலும் திமிரமும் விக்கலும் வீங்கலு முண்டாக்கும்.

கிரிகரன், புருவமெற்றுவித்தும் தும்முவித்தும் அழுவித்தும் திரியும்.

தேவதத்தன், விழிக்கும்பொழுது வஞ்சித்து ஓட உலாவ உயுத்தஞ் செய்யத் தலைப்படும்.

தனஞ்சயன், பிராணன் சரீரத்தை விட்டு வெளிப்பட்டபோதிலும் தான் பிரியாது நின்று உடம்பை வீங்குவித்தும் விரிவித்தும் புழுவித்தும் கொய்தும் கபாலத்தைப் பிளந்துபோம்.

வயிரவன், காலெலும்புங் கதிரெலும்புங் கூடிய விடத்திலே நின்று உடம்பில் அவஸ்தை யுண்டாக்கி ஈளை இருமல் முதலான நோய்களை யுண்டாக்கும்.

மூக்கியன், கையெலும்பு(உ-ம்)கதிரெலும்புங்கூடிய விடத்திலே நின்று சரீரத்தின் யாக்கைகளைச் சிறக்க நிறுத்தும்,

அந்தரியாமி, புருஷனுக்கு வாகனமாய் நின்று பிராணவாயுவுந் தோற்றுவிக்கும.

பிரவஞ்சனெனில், பிரணவத்துக் கிருப்பிடமாயிருந்து பிரவஞ்சனும் அந்தரியாமியும் சரீரத்திற்கு அடையாணியாகவும் அச்சாணியாகவும் இருப்பார்கள்.

## தாதுக்களாவன,

ரசம், உதிரம், மாம்ஸம், மேதை, அஸ்தி, மச்சை சுக்கிலம், ஆக-எ.

## இராகங்களாவன.

காமம், குரோதம், லோபம், மோகம், மதம், மாச்சரியம், இடும்பை, அகங்காரம் ஆக-அ.

இவைகளில்-காமமாவது - ஆசை, குரோதமாவது-கோபம், லோபமாவது-உள்ளதை யொளித்தல்,பொச்சரிப்புக்கொள்கை, மோகமாவது-தானல்லாததார்மரித்தால் தான் மரித்தாற்போலிருக்கை, மதமாவது-கெர்

வழுற்றுத் தானதர்ம பரோபகாராதிகளை விலக்குதல். மாச்சரியமாவது-ஒன்றைக்கண்டு மகிழ்தல், இடும்பையாவது-தானே சர்வாதிகாரியென்று நினைத்து யாவரையும் இகழ்தல், அகங்காரமாவது-தன் குற்றங்களை யறியாது பிறர் சொல்லைக் கேட்டுக் கோபித்தல்.

---

## கோசமாவன.

அன்னமயம், பிராணமயம், மனோமயம், விஞ்ஞானமயம், ஆனந்தமயம் ஆக-ரு.

### இவைகளில் தாதுக்களாலெடுத்தது அன்னமயகோசம்.

அன்னசாரத்தினாலே பிராணனும், பலனும் அடங்கியது, பிராணமயகோசம்.

பலத்தினாலே வந்து தோற்றப்பட்டது - மனோமயகோசம்.

அம் மனத்தின்கண்ணே தோற்றப்பட்டது - விஞ்ஞான மாதலால் அது விஞ்ஞானமயகோசம்.

ஆனந்தமயமானது-வித்தையால் அல்லது கல்வியால் ஞானம் வந்துதோற்றும், அது ஆனந்தமயகோசம்.

## இதற்குப்பிரமாணம்

சித்தியார்

## விருத்தம்.

தூலமாமன்னகோசம் தூலத்திற்பிராணனுற்றால்
வாவிய பிராணகோசம் மன்னுமிம்மனோமயத்தால்
சாலவேபுத்தியுற்றால் தருமம்விசஞானகோசம்
ஏலவேவிடயமுனபோ வியன்றது கோசமாமே.

---

## அந்தக்கரணங்களாவன

மனம், புத்தி, சித்தம், அகங்காரம் ஆக-௪.

இவைகளில் மனம்-நினைக்கும், புத்தி - நிச்சயிக்கும் அகங்காரங்கொண்டெழுப்பும், சித்தம் மூன்றுக்கும்கா ரணமாயிருக்கும், இதற்குப் பிரமாணம்.

## சித்தியார்

## விருத்தம்.

### மனத்துக்குவிவரம்.

ஐயமுஞ்சலனமு நிற்கச்செய்தலும்
வெய்யவெங்கொடுமையும் விதப்பமேவலும்
பொய்யதுவுணர்த்தலும் பொருத்தநோக்கலும்
மையல்கொண்டதலு மரிவுமாண்மையும்.

### புத்திக்கு.

அருளுறவிருத்தலும் அபயங்காத்தலும்
மருளுறுபுண்ணிய பாவமாட்சியும்
தெருளுறவிகாரமுந் திடப்படுத்தலும்
பொருள்தருமுவகைப் புத்தியாகுமே.

### அகங்காரத்துக்கு

பாசமூர்க்கமும் பண்பிலான்மையும்
யோசமுஞ்செயவெண் முடிவிலாமையும்
சோகமுங்கீழ்மையும் துரோகசொப்பனம்
மாய்கையுஞ்செய்ய மஹங்காரமாதலால்.

## சித்தத்துக்கு.

அருந்தவமுயற்சியு மடிகள்பேணலும்
விருந்தெதிர்கொள்கையும் மேன்மைகூறலும்
வருந்தினர்யாவரு மேத்தவாழ்தலும்
திருந்தியவிச்செயல் சித்தமாகுமே.

## அவஸ்தையாவன

சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி, துரியம், துரியாதீதம் ஆக-ரு.

இவ்வைந்தினுள் சாக்கிரமானது புருவமத்தியில் நின்று ராஜ ஒலக்கம் போல சதுரங்கபலத்துடனே யிருந்து சத்த-பரிச-ரூப-ரச-கந்தம் இவ்வைந்துடனும், வசன-கமன-தான-விசற்க-ஆனந்தமென்னும் அவ்வைந்துடனும், மனம்-புத்தி-சித்தம் - அகங்காரம் இந்த நாலும் சேர்ந்து கருவிகளுடனே சன்னதியில் சேவிக்க தான் பராசத்தியருளாலே வியக்தனாய் சுகதுக்கங்களை அறிந்து நின்றபோது சாக்கிரமாயின.

## இதற்குப்பிரமாணம்

## திருமந்திரம்.



கண்டனவைந்துங் கலந்தவோரைந்தும்
உண்டனநான்கும் ஒங்கியதுணர்ந்தபின்
பண்டையினாதி பரந்ததுசாக்கிரம்
அண்டமுந்தானா யமர்ந்ததுகாணே.

சொப்பனமாவது கருவி கரணாதி (௰௪-ல்) கருவிபத்தும் கண்டத்தில் நிற்கும்.

மற்ற கரணாதி (௪-ம்) சுழூத்தியோடுசிவாத்துமாவைக்கூடி சுவாச யிருதயத்திலே நின்றபோது கண்டவை கேட்டவை ஒன்றும் பிறர்க்குச் சொல்லப் புலப்படாதபோது சுழூத்தியாம்.

## இதற்குப்பிரமாணம்

## திருமந்திரம்.

ஆனமனமும் அறிகின்றபுத்தியும்
ஊனையிழந்துநின் றள்ளேஉயிர்ப்பெய்தி

தானமிழந்து தயங்கியவாறுபோல்
ஊனையிழந்த சுழுத்தியதாமே.

துரியமானது சுழுத்தியை விட்டுக் கரணமொன்றுடனே சீவாத்துமா நாபிஸ்தானத்தில் நின்றபோது உசுவாசம் நிசுவாசம் பிறக்கும், ஆகையால் இதற்குத் துரியமென்று பெயர்.

## இதற்குப்பிரமாணம்

## திருமந்திரம்.

தானத்தெழுந்து திரியுந்துரியதானம்
வானத்தெழுந்துபோய் வையம்பிறக்கிட்டு
சானத்தெழுந்து கருத்தின்தலையிலே
ஊனைத்தவிர்ந்து ஒளித்திருந்தானே.

## துரியமாத்திதமாவன.

கருவிகரணாதிபதினாலும்பற்றற்றுசீவாத்துமாதானே மூலாதாரத்திற் சென்றேங்கி மலம், மத்தம், மாய்கை பரிசங்களை யறியாமல் நின்றபோது துரியாதீதமென்றுபேராம்.

## திருமந்திரம்.

துரியமிருப்பது சாக்கிரத்துள்ளே
நரியள்பதினன்குஞ் நஞ்சுண்டற்றது
பரியபுரவியும் பாரிப்பரந்திடம்
துரியமிருந்திடஞ் சொல்லவொண்ணாதே.

## கேவலாவஸ்தை யாவன.

அதீதத்தை முதலாகக்கொண்டு ஒருவனை முன்னொருகாலத்தில் நாமறிந்திருக்க அவன் சிறிது நாளைக்குப் பிறகு நமதுமுன்வந்து என்னை யறிவீராவென்ன நானறியேனென்று நின்றவிடம் அதீதம், அதைக்குறித்து நிதானித் துணருமிடம் துரியம், ஆமோ அல்லவோவென்று சந்தேகிக்குமிடம் சுழுத்தி, மனத்தோற்றமுற்றது சொப்பனம் நீ இன்னானென்று நிச்சயித்துரைப்பது சாக்கிரமாம்.

## இதற்குப்பிரமாணம்

## அறிவானந்த சித்தியார்.

முன்னை அறிந்தும் அறிவிருந்ததுமுதலதீதம்
பின்னை நினைவின்றி மூச்சிட்டறிந்தபிறைதுரியம்

மன்னேமயங்கியை யுற்றசுழுத்திமனநினைவால்
தன்னேர்கனவது தானறிந்தொத்தது சாக்கிரமே.

## மத்தியாவஸ்தை.

சாக்கிரத்திற் சாக்கிரம். சாக்கிரத்திற் சொப்பனம். சாக்கிரத்திற் சுழுத்தி, சாக்கிரத்தில் துரியம், சாக்கிரத்தில் துரியாதீதம்.

இவற்றுள் சாக்கிரத்துள் சாக்கிரமானது கருவிகரணங்கள் பிரியாமல் ஒத்து நிற்பதாம்.

சாக்கிரத்திற் சொப்பனமானது, தான் நிச்சயம்போல் கண்டது கேட்டது சொல்லறியாததுவாம்.

சாக்கிரத்திற் சுழுத்தியானது, நினைவுமாத்திரம் பொய்யாய் பிறருக்குச் சொல்லவொண்ணுதிருக்கை, இது உசுவாசநிசுவாசமாக இருத்தலாம்.

சாக்கிரத்தில் துரியமானது: சகல கருவிகரணாதிகளுக்கும் அடங்கி பருமிருக்கையும் நித்திரை வருகையும் அவசமாய் விழுகையும் புருவமத்தியிலே நடுச்சக்கரத்திலேயுள்ளது.

மேலாவஸ்தையாவன.

புருவமத்தியில் சுழிச்சக்கரத்தில் இரண்டங்குல பிரமாணத்திலேயுள்ளது சொப்பனம்.

இதற்குமேல் இரண்டங்குலத்தி

பிரமாணத்திலுள்ளது.

சுழுத்தி.

---

இதற்குமேல் இரண்டங்குல பிரமாணத்திலுள்ளது.

துரியம்.

---

இதற்குமேல் இரண்டங்குலபிரமாணத்திலுள்ளது.

துரியாதீதமாம்.

---

## இதற்குப்பிரமாணம்

### திருமந்திரம்.

காலங்கிநீரிற் கலந்துடனாகாசம்
மாலங்கியீசன் பரமசதாசிவன்
மேலஞ்சுசென்று விரவவல்லார்க்குக்
காலனார் ஓலை கனவிலுமில்லையே.

### அவஸ்தை யாவன.

சகலாவஸ்தை, கேவலாவஸ்தை, சுத்தாவஸ்தை ஆக-௩.

சகலாவஸ்தையானது, சாக்கிரத்தில் கருவிகரணாதிகளுடன் கூடி அந்தக்கரணங்களுக்கு நினைவா யிருக்கும்.

கேவலாவஸ்தையோ வெனில், மூலாதாரத்தைப் பற்றி ஆணவம்மேலிட்டு ஒன்றுந் தெரியாமல்கிடக்கை.

சுத்தாவஸ்தையோ, சகலாவஸ்தையில் கருவிகரணாதிகளுடன் கூடி நின்று அலைச்சல் பிறவாமை கேவலாவஸ்தையில் ஆணவக்கிடையில் அறியாமை பிறவாம

லும் ஆசாரியரனுக்கிரகத்தினாலே இவை யிரண்டிலும் பற்றாமல் சுற்றத்தோடே கூடி நிற்கை.

---

குணங்களாவன.

ராஜஸம், தாமஸம், ஸாத்வீகம் ஆக-௩.

ராஜஸமானது, அத்தி-களிப்புற்றிருத்தல், அகங்காரம், போகம், ஆத்தமோதம், இடும்பை, கீர்த்தி, கொடை தருதலாம்.

தாமஸமானது, நித்திரை, களவு கள்ளுண்ணல், சோம்பு, வெட்டி, சிரிப்பு இவைகளாம்.

ஸாத்வீகமோவெனில், கொல்லாமை, பொய்யாமை அவருக்கை, பொறையுடைமை.விரதமுடைமை, அடக்கமுடைமை, யாவரையும் இகழாதொழித்தலாம்.

இவைகளில் ஒவ்வொன்றுக்கு

மும்மூன்று குணங்கள்

காண்க.

---

தாமஸராஜஸம், தாமஸதாமஸம்,தாமஸஸாத்வீகம் தாமஸகுணவிரிவே - ஸாத்வீகதாமஸம், ஸாத்வீகராஜஸம், ஸாத்வீகஸாத்வீகமாம். ஸாத்வீககுணவிரிவே-

ராஜஸதாமஸம், ராஜஸஸாத்வீகம் - ராஜஸராஜஸம்-ராஜஸ்குணவிரிவே.

---

மலங்களாவன

ஆணவம், மாயை, காமியம்-ஆக-௩.

இவைகளில் ஆணவமானது, ஆத்துமாவின் அறிவைமறந்துயான் எனதென்றும், அறியாமையெனவையும் பிறப்பித்து, தன்னுடைமையும் புத்திர - மித்திர-களத்திராதிகளும், பிரியமாய் இதில் நாம்மயங்குகிறோமென்று இவனுக்குத் தெரியாமல் சிதைப்பித்து ஆசையுண்டாக்கிக்கொண்டு தன்னதென்றிருக்கை.

மாயையானது, வேறொருவருடைய சொத்தைத் தன்னதென்று இடையூறு விளைவிப்பதும் உபத்திரவிக்கயத்தனிப்பதுமாம்.

காமியமானது, முந்திய இரண்டுவிதத்திற்கு ஒத்திருப்பதும், இதாகிதத்தினால் புண்ணிய பாவங்களையுண்டாக்குவதுமாம்.

இதன்றி மகா மாயையென்றும் திரோதான மென்றும் இரண்டுவித மலமுண்டாம்.

## ௱கஉ வேதாந்தக்கட்டளை.

மகாமாயையானது, தநுகரணபுவன போகங்களைக் கொடுத்து ஒன்றோடொவ்வாமல் புசிப்புகளும் வெவ்வேறாய் அனுதியாய் ஆத்துமாவுக்கு என்போக்ந்திர்ந் தாலும் இந்தத் தன்மை இரண்டுகாலத்திலும் ஒக்கும்.

ஆத்துமாவைத் தன்னிடத்திலும் இளைப்பாற்றிக்கிடத்த இடங்கொடுத்து பின்பு ஜனங்களுக்கும் பத்தியாயிருக்கும்.

திரோதானமானது, சிவசத்தியினது பதவியைத் திரோபாதவித்து நின்று, ஆத்மாக்களுக்குப் புண்ணிய பாவங்களையும் மட்டும் பொசிப்பித்து சிவசத்தியுடனே கூட்டும்.

ஈஷணைமூன்றாவன.

அர்த்தாஷணை, புத்திரேஷணை, லோகேஷணை ஆக-௩.

இது தன்னை யடைந்தா னென்பதாம்.

---

வியாதியாவன

வாதம், பித்தம், சிலேத்துமம் ஆக-௩.

இவைகளில் - வாதமானது, வாயுவிலுற்பத்தியாகிப் பிராணவாயுவு பிரசண்டமாய் அக்கினியும் - அப்பும் கலங்கில் வாதமாம்.

அக்கினிதிசையில் - வாயுகளும், ஆதாரத்தைப்பற்றி மிகவும் அசரித்து இதயகமலத்தை யூன்றில் பித்தமாம்.

அப்பு, வாயு, தேயு இம்மூன்றும் உடலில் கலவாமல் கலங்கில் சிலேத்துமமாம்.

---

## சரீரங்களாவன.

ஸ்தூலம், சூக்ஷ்மம், காரணம் ஆக - ௩.

இவைகளில் ஸ்தூலதேகமானது, ஆதி பிருதிவினால் சமைந்த உடல்.

சூக்ஷ்மதேகமானது, ஞானேந்திரியம் (௫) கன்மேந்திரியம் (௫) அந்தக்கரணம் (௪) பிராணவாயுவு (௧) ஆக ௰௫ - ம் கூடியது.

இவ்விரண்டு தேகமும் பற்றற்று நிற்பது காரணதேகமாம்.

ஆக தத்துவம் (௩௬-ம்) சரி.

## இதற்குப்பிரமாணம்

## திருமந்திரம்.

முப்பதுமுப்பது முப்பத்தறுவருஞ்
செப்புமதனிடை கோயில்வாழ்பவர்
செப்புலதனிடை கோயில்சிதைந்தபின்
ஒக்கஅவரும் ஒடெடுத்தாரே.

---

சுந்தரமூர்த்தி சுவாமிகள் அருளிச்செய்த

## தேவாரம்.

## திருக்கண்டீச்சுரம்.

தானெழுமங்கிரண்டா சழக்குடைபதிக்குநாதன்
வாணிபந்தொண்ணூற்ருறு வருமிகமயக்கஞ்செய்யப்
பேணியபதிக்குள்நின்று பிரியும்போதறியமாட்டேன்
சேணுயர்மாடமோங்குந் திருக்கண்டீச்சுரத்துளானே.

## அவையடக்கம்.

தத்துவந்தொண்ணூற்ருறுந் தாழ்விலாவாயுபத்தும்
மெத்தனாடிபத்தும் மெய்யுளே ஆருதாரம்

சுத்தமாங்கரணநான்குந் தோற்றுமண்டலங்கள்மூன்று
இத்தனையறியவல்லா ரிறையவராகுந்தானே. (ம்

—()—

திருநந்திதேவர்
ஆதி - திருவள்ளுவநாயனாராகிய
திருமூலதேவருக்கு
உபதேசித்தருளிய,
சித்தாந்தமும் வேதாந்தமுங் கடந்த
நாதாந்தமுடிவான
அமுர்தபஞ்சாட்சர துருவநிலையென்னும்
ஆருதார
ஜீவோற்பத்திசிந்தாமணியும்
தத்துவதிபிகையும்
முற்றிற்று.

உ

சிவமயம்.

# வேதாந்தத் தத்துவக் கட்டளை.

## காப்பு.

தந்தைதாயாவானுஞ் சார்கதியிங்காவானு
மந்தமிலாவின்பமக் காவானு-மெந்தமுயிர்
தானாகுவானுஞ் சரணாகுவானுமருட்
கோனாகுவானுங் குரு.

---

தத்துவங்கள்--௯௬.

இவை முதற்றத்துவம் - ௩௰, இரண்டாந் தத்துவம் ௩௰, மூன்றாந்தத்துவம் -௩௬, எனப்பிரிக்கப்பட்டு வழங்கும்.

முதற்றத்துவம்—௩௰.

| | |
|---|---|
| பூதம் | ௫ |
| பொறி | ௫ |
| புலன் | ௫ |
| கன்மேந்திரியம் | ௫ |
| கன்மவிஷயம் | ௫ |
| கரணம் | ௪ |
| அறிவு | ௧ |
| ஆக | ௩௰. |

இரண்டாந்தத்துவம் - ௩௰

| | |
|---|---|
| நாடி | ௰ |
| வாயு | ௰ |
| சயங்கள் | ௫ |
| கோசம் | ௫ |
| ஆக | ௩௰. |

மூன்றாந்தத்துவம் - ௩௬.

| | |
|---|---|
| ஆதாரம் | ௬ |
| மண்டலம் | ௩ |
| மலம் | ௩ |
| தோஷம் | ௩ |
| ஏடணை * | ௩ |
| குணம் | ௩ |
| இராகம் | ௮ |
| விணை | ௨ |
| அவஸ்தை | ௫ |
| ஆக | ௩௬. |

முதற்றத்துவம் — ௩௰ - ன் வரலாறு.

பூதம் — ௫.

| | |
|---|---|
| பிருதிவி | மண் |
| அப்பு | நீர் |
| தேயு | அக்கினி |
| வாயு | காற்று |
| ஆகாயம் | சுத்தவெளி |

பொறி — ௫.

| | |
|---|---|
| சோத்திரம் | செவி |
| தொக்கு | உடம்பு |
| சட்சு | கண் |
| சிகுவை | நாக்கு |
| ஆக்கிராணம் | மூக்கு |

சத்தம் = கேட்கப்பட்டது (செவிக்குயிர்க் கூறு.)

பரிசம் = சுகதுக்கவறிவு (உடம்புக்குயிர்க்கூறு)

* ஈஷணை என்னும் இச்சைப்பொருட்டான வடமொழியானது, விதிவழியே ஐகார வீறாய் ஈடணை எனநின்றுமரூஉவழக்கால் ஏடணை என வழங்குகின்றது.

| | கன்மேந்திரியம்—ரு. |
|---|---|
| உருவம்=காணப்பட்டது (கண்ணுக்குயிர் கூறு.) | வாக்கு = வாய் |
| இரசம் = அறுசுவை யறிவு (நாவுக்குயிர்க்கூறு.) | பாதம் = கால் |
| கந்தம் =சுற்கந்த துர்க்கந்த [வறிவு (நாசிக்குயிர்க்கூறு.) | பாணி = கை |
| | பாயுரு = அபானம் |
| | உபத்தம் = குறி. |

கன்மவிஷயம்—ரு.

வசனம் = வார்த்தை (வாய்க்குயிர்க்கூறு)
கமனம் = நடை (காலுக்குயிர்க்கூறு)
தானம் = கொடுத்தல்வாங்கல் (கைக்குயிர்க்கூறு)
விசர்க்கம் = விடுதல் (அபானத்துக்குயிர்க்கூறு)
ஆநந்தம் = மகிழ்தல்(குறிக்குயிர்க்கூறு)

கரணம்—ச.

மனம் = ஒன்றைநினைப்பது
புத்தி = ஒன்றைவிசாரிப்பது
அகங்காரம்= ஒன்றைக்கொண்டெழுப்புவது
சித்தம் = ஒன்றைச்செய்து முடிப்பது

அறிவு—க.

அறிவு = உள்ளந் தன்னைக்கண்டு மகிழ்ந்திருத்தல்

ஆக முதற்றத்துவம்-௩௰,

இரண்டாம்தத்துவம் - ௬௰ - ன் வரலாறு.

நாடி ௰.

இடை = வலதுகாற் பெருவிரலினின்று கத்தரிக்கோல் போல மாறலாக இடதுநாசியைப் பற்றி நிற்பது.

பிங்கலை = இடதுகாற் பெருவிரலினின்று கத்தரிக்கோல்போல மாறலாக வலதுநாசியைப் பற்றி நிற்பது,

சுழுமுனை * = மூலாதாரத்தைத் தொடர்ந்து எல்லாநாடிக்கும் ஆதாரமாய் நடுநாடியாய்ச் சிரசளவு முட்டி நிற்பது.

சிகுவை = மூலாதாரந்தொடங்கி உண்ணாக்கிலேநின்று சோறுதண்ணீர் இவைகளை விழுங்கப் பண்ணுவது.

புருடன் = மூலாதாரந் தொடங்கி வலதுகண்ணளவாய் நிற்பது.

---

* சுஷும்நா என்னும் வடமொழிசுடுமுனை எனற்பால்து விதிகடந்துமரூஉ வழக்காய்ச் சுழுமுனை என்றும், வழூஉ வழக்காய்ச் சுழிமுனைஎன்றும் வழங்கும்.

காந்தாரி = மூலாதாரந்தொடங்கி இடதுகண்ணளவாய் நிற்பது.

அத்தி = மூலாதாரந்தொடங்கி வலது காதளவாய் நிற்பது.

அலம்புடை= மூலாதாரந்தொடங்கி இடது காதளவாய்நிற்பது.

சங்கினி = மூலாதாரந் தொடங்கி குறியினளவாய் நிற்பது.

குகு = மூலாதாரந் தொடங்கி அபானத் தளவாய் நிற்பது.

வாயு - ௰.

| | |
|---|---|
| பிராணன் | நாகன் |
| அபானன் | கூர்மன் |
| வியானன் | கிருகரன் |
| உதானன் | தேவதத்தன் |
| சமானன் | தனஞ்செயன் |

இவற்றுள்:...

௧. பிராணன்=லலாட மத்தியிற்றோன்றிச் சித்திரநாடியில் விருந்து, ஒவ்வொன்று மூலாதாரத்திற் குதித்து, அவ் என்று நாபித்தானத்தில் முட்டி, சவ்

என்றுஇடைபிங்கலைகளிலோடி கபாலத்தைச்சுற்றி, நாசியிற் பன்னிரண்டங்குலம் புறப்பட்டு, நாலங்குலங் கழன்று எட்டங்குலம் மீண்டு, தானின்றவிடத்திற் றுக்குகுறவது. இப்படி நாழிகை ஒன்றுக்கு ளகூ0 - சுவாசம்; இரவுபகல் - கூ0- நாழிகைக்கும் உக, கூ௱-சுவாசம்.

இந்தச்சுவாசம்-உக, கூ00-க்கும் விவரம்,

| | |
|---|---|
| மூலாதாரத்திற்குச் சுவாசம் | கூ00 |
| பிருதிவியில் சுவாதிஷ்டானம் பிரமாவினிடஞ் சுவாசம் | கூ000 |
| அப்புவின்மணிபூரகம் விஷ்ணுவினிடஞ்சுவாசம் | கூ000 |
| தேயுவில் அனுகதம் உருத்திரனிடஞ் சுவாசம் | கூ000 |
| வாயுவில் விசுத்திமயேச்சுரனிடஞ் சுவாசம் | க000 |
| ஆகாசத்தில் லாஞ்ஞை சதாசிவனிடஞ் சுவாசம் | க000 |
| நாதாந்தத்தில் தட்சிணாமூர்த்தியினிடஞ்சுவாசம் | க000 |

ஆக உக, கூ00 சுவாசமியங்கி, இதில் எ, உ00-சுவாசம் பாழாகப்பாய்ந்து கச, ச00-சுவாசம் உள்ளே புகும் என்று அறியவும்.

உ. அபானன்=கீழ்நோக்கி குதத்தையுங் குய்யத்தையும் பற்றி நின்று மலசலாதிகளைக் கழிப்பிப்பது.

ரு. வியானன்=தோளிலேநின்று பரிசங்களை அறிவிப்பது.

சு. உதானன்=உதராக்கினியை எழுப்பி உண்ட அன்னசாரத்தை-எஉ000-நாடி நரம்புகளிலே கலப்பித்துச் சரீரத்தை வளர்ப்பிப்பது.

ரு. சமானன்=எல்லாவாயுவையும் ஏறுதல் குறைதல் செய்யவொட்டாமற் சமனாய்க் கீழ்கொண் டியங்குவது.

சு. நாகன்=கொட்டாவியும் விக்கலுங்கக்கலும் உண்டாக்குவது.

எ. கூர்மன்=கண்ணிலேநின்று இமைப்பது.

அ. கிரிகரன்=புருவமத்தியத்தைப்பற்றி நின்று நீட்டல், முடக்கல், கோபித்தல், தும்முதல், அழுவித்தலுஞ் செய்வது.

கூ. தேவதத்தன்=விழித்திருக்கும்போது ஓடுவித்தலும், உலாவுவித்தலும், உயுத்தம் பண்ணுவித்தலும் சிரித்தலும், வியசனமுண்டாக்கலையும் செய்வது.

க0, தனஞ்சயன்=பிராணன் உடம்பை விட்டுப் போனாலும், தான்பிரியாமல் நின்று உடம்பை வீங்குவித்

தலும், விரிவித்தலும், புளிப்பித்தலுஞ் செய்து, மூன்றுநாட்கப்பாற் கபாலத்தைப் பிளந்தோடிப்போவது.

சயம் - ௫

அமர்வாசயம், பகிர்வாசயம், சலவாசயம், மலவாசயம், சுக்கிலவாசயம்.

க. அமர்வாசயம்=உண்ட அன்னந்தண்ணீர் அமருமிடம்.

உ. பகிர்வாசயம்=அன்னம் தண்ணீர் பகிருமிடம்.

௩ சலவாசயம்=சலஞ்சேருமிடம்.

ச. மலவாசயம்=மலஞ்சேருமிடம்.

௫. சுக்கிலவாசயம்=சுக்கிலஞ்சேருமிடம்.

கோசம் - ௫.

அன்னமயகோசம், பிராணமயகோசம், மனோமயகோசம், விஞ்ஞானமயகோசம், ஆனந்தமயகோசம்.

க. அன்னமயகோசம்=சட்பாவ விகாரமாகத் தோற்றப்பட்ட தூலதேகம் இதற்குற்பத்தி பிருதிவி.

உ. பிராணமயகோசம் = பிராணனுங் கன்மேந்திரியமுங் கூடிநிற்பது. இதற்குற்பத்தி அப்பு.

௩. மனோமயகோசம் மனதுங் கன்மேந்திரியமுங் கூடி நிற்பது, இதற்குற்பத்தி தேயு.

௪. விஞ்ஞானமயகோசம்=புத்தியும் ஞானேந்திரியமுங் கூடிநிற்பது. இதற்குற்பத்தி வாயுவு.

௫. ஆனந்தமயகோசம்=பிராணவாயுவுஞ் * சமுத்தியுங் கூடிநிற்பது. இதற்குற்பத்தி ஆகாசம்.

மூன்றுந்தத்துவம் ௩௬-ன் வரலாறு.

ஆதாரம்-௬.

மூலாதாரம், சுவாதிஷ்டானம், மணிபூரகம், அநாகதம், விசுத்தி, ஆஞ்ஞை.

௧. மூலாதாரம்= நாற்சதுரத்துக்குள்ளே முக்கோணமாயிருப்பது; இதனடுவே நிற்கும் எழுத்து ஓங்காரம்; இதில் நிற்குந் தேவதை விநாயகன்; இதனிடம் குதத்துக்குங் குய்யத்துக்கும் நடு.

௨. சுவாதிஷ்டானம்=நாற்கோணமாயது, இதனடுவே நிற்கும் அக்கரம் நகாரம்; அதிதேவதை பிரமா, இதனிடம் இலிங்கபீடம்.

ஆக இரண்டாந்தத்துவம்-௩௭.

* ஸுஷுப்தி என்னும் வடமொழிசமுத்தி என மருவி நின்றது.

௩. மணிபூரகம் = பிறைக்கோணமாயது; இதனடுவே நிற்கும் எழுத்து மகாரம்; அதிதேவதை விஷ்ணு இதனிடம் உந்திக்கமலம்,

௪. அநாகதம்=முக்கோணமாயது; இதனடுவே நிற்கும் எழுத்துச்சிகாரம்; அதிதேவதை உருத்திரன், இதனிடம் இருதயகமலம்,

௫. விசுத்தி=அறுகோணமாயது; இதில் நிற்கும் எழுத்து வகாரம்; அதிதேவதை மஹேச்சுரன், இதனிடங் கண்டம்.

௬. ஆஞ்ஞை=வட்டமாயிருப்பது, இதனடுவே நிற்கும் எழுத்துயகாரம்; அதிதேவதை சதாசிவன், இதனிடம் புருவமத்தி.

இப்படி ஆதாரம் ஆறிலேயும், ஆறெழுத்தும், ஆறு தெய்வமும், ஆறு வீடும், அதில் ஐம்பத்தோ ரக்ஷரமுங் கண்டுகொள்க.

மண்டலம் - ௩.

அக்கினிமண்டலம், ஆதித்தமண்டலம்.
சந்திரமண்டலம்.

௧. அக்கினிமண்டலம்=நாற்சதுரமாய், நடுவே மூன்று கோணமாய்ப் பிருதிவியும் அப்புவுங் கூடின விடத்

தே, நாலிதழுடைய புஷ்பமாயிருப்பது.

உ. ஆதித்தமண்டலம்= இருதய கமல அறுகோணமெட்டிதழுடைய புஷ்பமாய், வாழைப்பூப்போன்று கீழ்நோக்கி யிருப்பது.

௩. சந்திரமண்டலம் = கோடி சந்திராதித்த ருதயம் ஆற்றைப்போலச், சிரசு வடுவே ஒவ் என்ற அக்ஷரத்தை முன்னிட்டுப் பேதித்து இந்த அமிர்தகலை அக்கினி மண்டலத்தை மேனோக்கிச் சோதியாய் இதனடுவே பராசத்தி எழுந்தருளியிருப்பது.

மலம் – ௩.

ஆணவம், காமியம், மாயை.

க. ஆணவம்=உடம்பை நானென்றிருக்கை
உ. காமியம் *=கண்டதுக்கெல்லா மாசைப்படுகை
௩. மாயை=தனக்கு வருவதையறியாமற் கோபங்கொண்டிருக்கை.

தோஷம் – ௩.

வாதம், பித்தம், சிலேத்துமம்.

வாதம் = வாயுவின் கோபம்
பித்தம் = அக்கினியின்கோபம்

சிலேத்துமம் † = அப்புவின் கோபம்
இந்தமூன்றுகோபத்தாற் சகலவியாதியுமுண்டாகும்.

ஏடணை - ௩.

அத்தவேடணை, புத்திரவேடணை, உலகேடணை.

அத்தவேடணை = திரவியத்தைவேண்டி ஆசைப்படுதல்,

உலகேடணை = ஊருங்காணியுந்தேடி ஆசைப்படுத்தல்.

குணம் - ௩.

இராசதம், தாமதம், சாத்துவீகம்.

இராசதம் = அகங்காரமாய் மத்திமகுணத்தனுயிருத்தல்

தாமதம் = உன்மத்தனுய் அதமகுணத்தனுயிருத்தல்.

---

* கார்மியம் என்னுங் கர்மசம்பந்தத்தை உணர்த்து, ம் வடமொழிரேப லோபப்பட்டு காமியம் என மருவிற்று.

† சிலேஷ்மம் என்னும் வடமொழி சிலேட்டுமம் என‌ற்பாலது, பிதிகடந்து சிலேத்துமம் என மருவிற்று.

புத்திரவேடணை = புத்திரனைவேண்டி ஆசைப்படுதல் இதை ஒழித்துக் களத்திரவேடணை என்றுங் கூறுவதுண்டு.

சாத்துவீகம்=யாருக்கும் நல்லவனாய் ஞானகுணத்தனா யிருத்தல்.

இராகம் - அ.

காமம், குரோதம், உலோபம், மோகம், மதம், மாற்சரியம், இடம்பை, அகங்காரம்.

| | | | |
|---|---|---|---|
| காமம் | = ஆசை | மாற்சரியம் = உறவாயும் உதட்டில்=நகைப்புமாயிருந்துஉட்பகைவிளைவித்தல் | |
| குரோதம் | = பிணக்கு | | |
| உலோபம் | = பிடிபாடு | | |
| மோகம் | = பிரியம் | இடம்பை=உதாசீனம் | |
| மதம் | = கெருவம் | அகங்காரம்=கோபித்தல் | |

வினை - உ.

நல்வினை, தீவினை.

நல்வினை = புண்ணியஞ்செய்தல்
தீவினை = பாவஞ்செய்தல்

அவஸ்தை - ரு.

சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி, துரியம், துரியாதீதம்.

சாக்கிரம் = லலாடத்தானம்
சொப்பனம் = கண்டத்தானம்
சுழுத்தி = இருதயகமலம்

துரியம் = நாபிகமலம்.
துரியாதீதம் = குறியிடம்.

சாக்கிரம்,

லலாடத்தானத்தில் முன்சொல்லிய சத்தம், பரிசம், உருவம், இரசம், கந்தம், வசனம், கமனம், தானம், விசர்க்கம், ஆனந்தம், மனம், புத்தி, அகங்காரம், சித்தம், இப்பதினாலுகருவிகளுடன் தன்னுடைய சத்தியிற்சேர்க்கத்தக்கதாகப் பராசத்தியருளால் இராசாவும் படையும்போல நிற்கும்

இதற்குச் சாட்சி

திருமந்திரம்.

கண்டனவைந்துங் கலந்தனபோனொந்து
முண்டனனான்கு மொழியுணர்ந்தபின்
பண்டெங்கனாந்தி பகர்ந்துவிச்சாக்கிர
மண்டமதாக வமர்ந்திருந்தானே.

சொப்பனம்,

இப்பால் முன்சொன்ன பதினாலு கருவியிலே பத்து மொழிந்த கரணங்கள் நான்கும் கண்டத் தானத்தி னிற்கும்போது கனவுகண்டு மறந்தாலிதென்றறியவும்,

இதற்குச்சாட்சி

திருமந்திரம்.

பண்டுமொழிந்த பசுவில்பத்தும்போய்
கண்டமதனிற் காரணங்கலந்துதான்
மண்டிவினோத மனைவாழ்க்கைதன்னிலே
கண்டுமறந்த கனவதுவாமே,

சுழுத்தி,

முன்சொன்ன காரணம் நான்கில் இரண்டு மொடுங்கி மற்ற இரண்டும் வந்திருதயகமலத்திலே நின்றதென்றறி யவும்.

இதற்குச்சாட்சி

திருமந்திரம்.

ஆனமனமு மறிவின்றபுத்திய
மூனையிழந்துநின் றுள்ளேயுயிர்ப்பெய்தித்
தானமிழந்து தடங்கியவாறுபோல்
ஞானமிழந்து சுழுத்தியதாமே.

துரியம்.

முன்சொன்ன இரண்டி லொன்றொடுங்கி ஒன்றுபோய் நாபிகமலத்தி னிற்குமென் றறியவும்.

இதற்குச்சாட்சி

திருமந்திரம்.

காணத்தெழுந்து திரியுந்துரியந்தான்
வானத்தெழுந்துபோய் வையம்பிராக்கிந்தே
தானத்தெழுந்த கருந்தின்றலையிலே
யூனத்தவிரக்தூமங் கோங்கிநின்றனே.

துரியாதீதம்.

துரியாதீதங் கெட்டவிடத்தில் ஆன்மா மூலாதாரத்திற் கிடந்துறங்குமென்றறியவும், முன்சொன்ன பதினலு கருவியுமிறந்தவிடம்.

இதற்குச்சாட்சி

திருமந்திரம்;

துரியமிருப்பது சாக்கிரத்துள்ளே
நரிகள்பதினலு நஞ்சுண்டுசெத்தது
பரிபுரவியும் பாரிற்பிறந்திடந்
துரியமிருப்பிடஞ் சொல்லவொண்ணதே,

ஆக மூன்றுந்தத்துவம் - ௫௫.

இதற்குச் சாட்சி

திருமந்திரம்.

முப்பதுமுப்பது முப்பத்தறுவருஞ்
செப்புமதிலுடைக் கோயிலுல்வாழ்பவர்
செப்புமதிலுடைக் கோயில்சிதைந்தபி
னெப்பிலனைவரு மோட்டெடுத்தாரே,

வேதாந்தத் தத்துவக்கட்டளை

முற்றிற்று.



உ

சிவமயம்.

# ஞானக்கட்டளை.

இகபரங்களிலே யாவரொருவர்க்கு முன்செய்த தவத்தினால் ஞானத்தில் விருப்புற்றுச், சற்குருநாதன்சேர்வை கிடைத்து, மோட்சம்பெறப் பரிபக்குவம் வந்தவிடத்து வேதாந்த தெரிசனவிளக்கமே சூரியப்பிரகாசவிளக்கமாயிருக்கும்? மற்ற நூற்களியாவும் மின்மினி விளக்கமாயிருக்கும், ஆகையால் வேதாந்ததெரிசனமே யுண்மையெனவறிக,

இனிவேதாந்த தெரிசனஞ் செய்வதெப்படி யெனில், நான்குவேதமே முப்பத்திரண்டு உபநிடதமாயும். நான்கு வாக்கியமாயும், ஆறுசாஸ்திரமாயும், இன்னும் அநேக நாகோப சாகைகளாய், விரிந்திருந்தாலும் இவையிரண்டுவகையாயிருக்கும்.

அவையாதெனில்; அர்ப்பசுருதிவாக்கிய மென்றும் பிரபலசுருதி வாக்கியமென்றுமாம்.

இவற்றுள் அற்பசுருதிவாக்கியங்கள் கர்மகாண்டத்தைச்சொல்லும், பிரபலசுருதிவாக்கியம் ஞானகாண்டத்தை

ச்சொல்லும்; இந்தஞானகாண்டத்தைச் சொல்லா நின்ற பிரபலசுருதிவாக்கியம் மகாவாக்கியமென்று சொல்லப்படும்.

அவ்வாக்கியம்விபரம் யாதெனில்? நான்குவர்ணமும்; மூன்றுபதமும், மூன்றுபதார்த்தமும், மூன்றிலக்கணையுமாய் விளங்கும்.

வர்ணம் நான்காவன, சத்தியம், ஞானம், அநந்தம், ஆனந்தம்,

பதம்மூன்றாவன: தற்பதம், தொம்பதம், அசிபதம்.

பதார்த்த மூன்றாவன? அது, நீ, ஆனாய், என்பனவாம்.

இதில் அதுவென்றது பரம், நீயென்றது சீவன், ஆனாயென்றது (ஐக்கியப்பொருளாகிய) சிவம்.

இலக்கணைவாக்கியம், மூன்றாவன; விட்டலக்கணை-சம்சர்க்கவாக்கியம், விடாதலக்கணை விசிட்ட வாக்கியம் விட்டுவிடாதலக்கணை-அகண்டவாக்கியம்.

இப்படி விளங்கிய வேதாந்தசூத்திரத் தத்துவம் ௨., அ இத்திருபத்தெட்டே அபரோட்சமாகிய காரிய உபாதி-எ. பரோட்சமாகிய காரண உபாதி எ. அவத்தை-௬. அபிமானி ௬. முக்கியம், லட்சியம்-௨. அசுத்தாசுத்தம்-௨.

இவைகள் விளங்கவேண்டுமானால்? சிரவண; மனனம், நிதித்தியாசனத்தினால் விளங்கவேண்டும்.

சிரவணமாவது, முன்சொன்ன வேதாந்தப் பொருளை க்குருநாதன்பக்குவனுக்குச் சொல்லக்கேட்பது

மனனமாவது; அதைச்சீடன் சதாசிந்திப்பது.

நிதித்தியாசனமாவது சிந்தித்தபடியே அறிவது

தத்துவதெரிசனம்.

இனிமுன்சொன்ன வேதாந்தத்தத்துவம்.

இருபத்தெட்டாவன.

சகளவடிவமான அசித்துருவதத்துவம். ௨௪, நிட்களவடிவமான சித்துருவதத்துவம் ௪ இதில், சோத்திரம், தொக்கு, சட்சு, சிங்குவை, ஆக்கிராணம் ஆகிய ஞானேந்திரியம் ௫. வாக்கு, பாதம், பாணி, பாயுரு, உபத்தம், ஆகிய கன்மேந்திரியம் ௫. ஆகப்பொறி. ௰. இவைகளின் விஷயங்களாகிய சத்தம்; பரிசம், ரூபம், ரசம், கந்தம், வசனம், கமனம், தானம், விசர்க்கம்; ஆனந்தம் ஆகிய ௰. மனம், புத்தி, அகங்காரம், சித்தம், ஆகிய அந்தக்கரணம். ௪, ஆக அசித்துருவதத்துவம். ௨௪. புருடன், காலபரம், வியோமம், பரம்ஆக சித்துருவதத்துவம் ௪, ஆக இருபத்தெட்டாம்.

இந்த இருபத்தெட்டுத்தத்துவமே சக. சீவ, பரமென மூன்றுபொருளாய் விளங்கும்; அதெப்படியெனில் ௨௪ தத்துவமும் சகமாகவிளங்கும்; புருடன், கலாபரம். வி

யோமம், மூன்றும் வெறுகவிளங்கும், பரமொன்றுமே சிவமாகவிளங்கும், இதே இன்னம் சத்தியம், பரம், ஞானம், சிவம், அநந்தம், சராசரம், ஆனந்தம், சகலபுவனமாகவும் விளங்கும் இதுவே தத்துவதெரிசனமாம்.

தத்துவதெரிசன முற்றிற்று.

---

## ௧. இனிதொம்பதசிரவணம் சொல்லுகிறோம்.

முன் தற்பதத்தைச்சொல்லாமல் தொம்பதத்தை முதற்சொன்னதேதெனில்;—நீயென்ற பதார்த்தமாகிய சீவன் நிர்விகாரியாய்ச், சித்துருவமாயிருக்குந் தன்னை யறியாமற் சடத்தைத் தானென் றறிந்திருப்பதால்,இச்சடம் நீயல்லவென்று விலட்சணைப்படுத்திப் போதிப்பதற்காக அதுநீயானுயென்றவாக்கியத்தை நீ அது ஆனு யென்றும், தத்தோமசியென்ற வாக்கியத்தை தொந்தத்தசியென்றும், அன்னுவயப் படுத்தியுரைக்கலாயிற்று.

இனி தொம்பதவுபாதியான துகாரியவுபாதியென்றும். சிவவுபாதியென்றும், ஒவ்வொன்று எழுவிதமாய் விளங்கும்.

அதெப்படியெனில்.—

முன்சொன்ன சித்துருவதத்துவம் ௨-ம்நிற்க, அசித்துருவதத்துவம் ௨௪-ல் பொறிகள்-௫-ம், தேகமொன்றும் ஆகப்பதினொன்றுஞ்சேர்த்து ஒன்று, விஷயங்கள் -௫-ம் சேர்த்துஒன்று அந்தக்கரணம் ௪ இவைகளுக்குச் சகாயமாகிய பிராணன் ௧. ஆக காரிய உபாதி ௭.

இந்தக்காரியவுபாதி ஏழுமாகியதேகம், நீயல்ல, எப்படி நானல்லவெனில்.--என்தனம்என் தானியம்என்புடவை, என்னுடைமையாதி என்பதுபோல எனதேகம், என் இந்திரியம், என்பிராணன், என்மனம், என்புத்தி, என் அகங்காரம், என்சித்தம்? என்றுஉன்னாலறியப்படுவதால், இவைகளும்அந்தக்கரணங்களின் தொழில்களாகிய ஐயம், துணிவு, அபிமானம் சிந்தனை, ஆகிய இவைகளும்நீயல்ல.

ஆனால் நானாரெனஇந்தஏழுபாதியாகிய மூன்றுதேகத்தையும் இது இது வெனப்பகுத்தறிந்திருக்கின்ற அறிவாகிய ஆத்மாவேநீ,

இந்தநீ இவ்வேழுபாதியுடன்கூடியிருந்தபோது முக்கியமென்றும், அவ்வுபாதியை நீங்கியிருந்தபோது லட்சி

யமென்றும், அதுநானென்றபோது அசுத்தமென்றும் அவ்வுபாதியை நானல்லவென்றுகண்டபோது சுத்தமென்றுமாம்.

இவ்வுபாதியாகிய தேகம் நானல்லவென்றதற்கு வேதப்பிரமாண முண்டோவெனில் உண்டு, அஃதாவது.

சம்சர்க்கவாக்கியமென்றும் விட்டலக்கணை யென்றுமாம். இதற்கருத்தமியாது? மச்சுவீடு கூப்பிடுகிறதென்றும் கங்கைசத்திக்கிறதென்றும், சொன்னால் மச்சு வீடுசத்திக்குமா சத்தியாது, மச்சுவீட்டுக்குள் ஒருபுருஷனிருந்து சத்திப்பானென்றருத்தங்கொள்வதுபோலவும் கங்கை சத்திக்குமா, சத்தியாது; கங்கைக்கரையில் இடைச்சேரியிருக்கும் அதிலிருக்கிறவர்களே சத்திக்கிறார்களென்றருத்தங்கொள்வதுபோலவுஞ்சடமாகிய தேகஞ்செய்கையாதிசெய்யுமா; செய்யாது. தேகத்திற்குள் ஆத்மாவாகிய நீயிருந்துசகலசெய்கையுஞ் செய்விக்கிறாயென்பதே,

ஆகையால் நீயும் அப்படியே "அறிவதுமல்லாமல் காரியவுபாதித்தன்மையும் உனக்குடம்பு அன்னியமென்பதையு. உனக்குள்ள முக்கியமும் லட்சியமும் சுத்தாசுத்தமும் சம்சர்க்க வாக்கியத்தினுடையவிட்டலக்கணையும்

நாமனுக்கிரகிந்தபடி உன்னனுபவத்தைச்சொல்லென. சு
வாமிதேவரீர் திருவாய்மலர்ந்தருளிய சிரவணத்தினால்
அடியேனுக்குக் கேள்விஞானமாகத் திடமாயிற்றென, இ
துவே தொம்பதசிரவணமென்றறிக.

தொம்பதசிரவண முற்றிற்று.

---

## உ-இனிதொம்பதமனனம்.

இனித் தொம்பதமனன மெப்படியெனில்? முன் சொன்னகாரியவுபாதி எழும் ஆத்மாவுக்குத் தூலதேகம். சூக்குமதேகம், காரணதேகம், எனமூன்று தேகமாயிருக்கும். அதெப்படி?

எழுபாதியுடன்கூடிநின்றவிடமே தூலதேகம்இதில் தேகம் இந்திரியம் க, விஷையம் க. ஆக இரண்டுபாதியும் - நிற்க - மனாதி - ச - ம் பிராணாதி வாயுக்கள் க-ம் ஆக ஐந்துவுபாதியுடன் கூடிநின்றவிடம் சூக்குமதேகம், இதில் மனாதி ச-உபாதியும் நிற்க பிராணாதிவாயுக்களாகிய ஒருபாதியுடன்கூடி முன்சொன்ன உபாதி

யாவுந்திரண்டு ஒன்றாயொடுங்கி மூலப்பிரகிருதியாய் நின்றவிடம்காரணதேகம்? ஆகியஇந்தமூன்றுதேகமே சாக்கிரம்,சொப்பனம், சுழுத்திஎன்னும் மூன்றவத்தையாம் அதெப்படி,

எழுபாதியோடுங் கூடிநின்ற தூலதேகமே சாக்கிரம் இதைநானென்றபிமானித்த ஆத்மாவுக்கு அபிமான நாமம்விசுவனென்றறி,

இனி ஐந்துபாதியுடன் கூடிநின்றசூக்குமதேகமே சொப்பனம், இந்தச்சொப்பனத்தை நானென்றபிமானித்தஆத்மாவுக்கு அபிமானநாமம்தைசதனென்றறி.

இனி பிராணவாயுவாகிய ஒருஉபாதியுடன்கூடி நின்ற மூலப்பிரகிருதியான காரணதேகம் சுழுத்தி இதை நானென்றபிமானித்த ஆத்துமாவுக்கு அபிமானநாமம் பிராஞ்ஞனென்றறி.

இந்தமூன்றுதேகமானமூன்றவத்தையும் சீவனுடைய முக்கியார்த்தமாகையால் மூன்றுதேகமான மூன்றவத்தையும் நீயல்ல, எப்படிநானல்ல.

இந்த எழுபாதியுடன் கூடிநின்ற தூலதேகம்சாக்கிரமென்றும், இந்தச்சாக்கிரம் சொப்பனத்திலழிகின்றதென்றும் உன்னாலறியப்படுவதால், இதுநீயல்ல. இதிலபிமானநாமமும் உனக்கில்லை.

இனிஐந்து உபாதியுடன்கூடிநின்ற சூக்குமதேகம் சொப்பனமென்றும, இந்தச்சொப்பனம்சழுத்தியிலழியுமென்றும். உன்னாலறியப்படுவதால் இதுவு நீயல்ல, இதில் அபிமானநாமமும் உனக்கில்லை.

இனிபிராணவாயுவாகிய ஒருபாதியுடன் கூடி நின்ற மூலப்பிரகிருதியான காரணதேகம்சழுத்திஎன்றும், இந்தச் சழுத்தி ஏதுந்தெரியவில்லை என்றழிந்து போனதும் உன்னாலறியப்படுவதால், இதுவும் நீயல்ல இதில்அபிமானநாமமும் உனக்கில்லை.

இந்த மூன்றவத்தையாகிய மூன்றுதேகமும் நானல்லவெனில்பின்னை நானாரென

இந்த மூன்றவத்தையின் விரிவொடுக்கங்களை யறிந்து சாட்சியாயிருக்கின்ற சைதன்யமான அறிவேஆத்மசொரூபமென்கின்ற நீ.

இந்த ஆத்மசொரூபம் உபாதி, தேகம்; அவத்தைமுதலியதுரிசெல்லாம்விட்டுமேலாகவிளங்கிக் கொண்டிருப்பதால்,முன்கொண்டிருந்த அபிமானநாமங்களைவிட்

டேத். துரியமென்னு ம் நாமத்தைப் பொருந்திச்சத்ததொ ம்பதார்த்தமாய்விளங்கிக்கொண்டிருக்கின்றது.

ஆகையால் இந்தச்துரியசொரூபமே நீ என்னும் ஆத் மசொரூபம் இதைநீயுன் மனத்திற்றரித்து அனுபவி த்திரு,

இப்படி மனதிற் றிடமாகத்தரிப்பதே தொம்பதமன னம்.

தொம்பதமனனம்முற்றிற்று

௩. இனிதொம்பதநிதித்தியாசனம்யாது,

சுவானுபூதியிற்காட்சிப்படுத்துவதே சுவானுபூதியென்பதென்னை.

உன்னனுபவத்திலே நீகண்டிருந்த தெளிவை நீசொ ல்வதே,

ஆகையால் முன்சொன்ன தத்துவரூபம்,உபாதித்த ன்மை. அவத்தைநிலைகள், அபிமான நாமங்கள். முதலி யயாவும், கண்டுசெழன்றுதரிசற்றுமேலான துரிய சொரூ பதரிசனமும்உனக்குநாமனுக்கிரகித்தபடி சிரவணத்திற்

புலப் படக்கேட்டுத் திடப்படத்தரித்திருப்பதைச்சொ ல்லென;

சீடன் அனுபவங்கூறல்; சுவாமி தேவரீர் திருவாய்மல ர்ந்தருளியகருணையால் அடியேனுக்குப் பசுபரத்தா ணியடைந்ததுபோல தொம்பத லட்சணமனைத்துமந ன்குணர்ந்தேன், அதுஎப்படியென:

ஸ்தூலோபாதியுடனே அத்தூலதேகத்திலிருந்து புருடன் விஷயாதி போகங்களை யநுபவிப்பது சாக்கிரமென் றும் இதில் அபிமானி விசுவனென்றும்; இந்தச்சாக்கிர ம் சொப்பனத்தில அழிந்ததென்றுங்கண்டேன்.

இனியைந்து உபாதியுடன் கூடிச் சூக்குமதேகத்தி லிருந்து விஷயபோகங்களை யநுபவிப்பதாகப்புருடன் பாவிப்பது சொப்பனமென்றும்; இதற்கபிமானி தைஜ சதனென்றும் இந்தச்சொப்பனம் சுழுத்தியிலழிந்த தெ ன்றுங் கண்டேன்

இனி, ஒருஉபாதியான பிராணவாயுவொன்றுடன் கூ டிய காரண தேகத்திலிருந்து புருடன் கருவிகரணங்க ளொன்றுமில்லாமல், எல்லாமொடுங்கிப்போய், ஏதுந்தெ ரியாமலிருளாயிருந்ததைச் சுழுத்தியென்றும்; இதற்க பிமானிபிராஞனென்றுங்கண்டேன்.

இந்த அறியாமையான சுழுத்தி அறிவினிடத்தில், அழி ந்ததாங்கண்டேன்.

இந்தஅறியாமையென்னுஞ் சுழுத்தியிருளைக் கெடுத் து அறிவாய்நின்ற தொம்பத சுத்தாத்மாவான துரியத் தை யென்வடிவெனக் கண்டேன்.

அப்படிக்கண்டசொரூபம் எப்படி யிருந்ததெனில் அறிவேவடிவாகியும் ஞானப்பிரகாசமாகியும், தனக்கு முதல், நடு, இறுதி பக்கமென்ப தில்லாமல் சர்வபுவன சராசரமும் தன்னிடத் திற்றோன்றியும் விளங்கியும். ஒடுங்கியும். வருவதாய் அதற் குச்சாட்சியுமாய் விளங்கிய அறிவாகிய என்வடிவைக் கரதலா மலகமபோலக்கண்டேன்.

தேவரீர் கருணை கடாக்ஷத்தினாலே சீவன்முத்தனானேன்: முப்பொறிப்பகைகளான மன, வாக்குக்காயத்தினால் வரப்பட்ட காமாதி எண்வகை விகாரங்களும் அறுத்தேன்; நிர்விகாரியுமானேன், ஈடேறினேன் என,

வாராய்சீடனே? உனக்கு ஆத்மபோதம் நன்றாக விளங்கப்பெற்றாய், ஆகையால் தேகாந்தமளவும் இந்நிலையைப் பிரியாதே.

தொம்பத சித்தியாசனமான ஆத்மதரிசனம்

முற்றிற்று.

சுவாமி தேவரீருடைய அனுக்கிரகத்தால் ஆத்மபோதம் பெற்றுச் சீவன்முத்தருனதுபோல் இதற்குமேலான பரபோதமும் பெற்றுப் பரமுத்தனாகும்

படிதேவரீர் திருவாய்மலர்ந்தருளி யிரட்சிக்கவேண்டு மென்று சீடன் விண்ணப்பஞ்செய்யக் குருநாதனருளிச் செய்கின்றார்.

---

## ௪-இனிதற்பதசிரவணம்.

அஃதாவது முன்சொன்ன தொம்பதப்பொருளுக்கு ஏழு உபாதியுண்டானதுபோலத் தற்பதப்பொருளுக்கும் ஏழு உபாதியுண்டாய்விளங்கும், அதெங்ஙனெனில்.

முன் சொன்னதத்துவப்படி புருடன், காலபரம்வியோமம், என்றுசொல்லப்பட்ட மூவகையறிவுருவானசீவதுரியம் பரனுக்குடலாகஏழுஉபாதியாய்விளங்கும்.

### அதன்விவரம்.

சர்வஞ்ஞன், சர்வகாரணன்; சர்வேந்திரியாமி, சர்வேசுரன, சர்வசிருட்டி, சர்வதிதி, சர்வசங்காரம், என ஏழாம்.

இப்படி ஏழுவகைப்பட்ட உபாதிநாமம் ஆத்மதுரியத்துக்கு எப்படியனுபவமாமெனில்? சர்வேந்திரியங்களினுடைய செயலையுந் தானறிந்து கொண்டிருப்பதால் சர்வஞ்ஞனென்றும், சர்வேந்திரியங்களு மழிந்தவிடத்தும் தானழிவற்று நித்தியனா யிருப்பதால் சர்வகாரண

னென்றும், சர்வேந்திரியங்களிலும் உள்ளீடாயிருப்பதா
ல் சர்வேந்திரியாமியென்றும், சர்வேந்திரியங்களுக்கும்
மேலான அதிபதியாயிருப்பதால் சர்வேசுரனென்றும்
சர்வேந்திரிய சர்வபிரபஞ்சங்களையுந் தானே தோற்றுவி
ப்பதால் சர்வசிருஷ்டியென்றும், சர்வேந்திரியாதிகளையு
ம் தான்பரிபாலனம் பண்ணுவதால் சர்வதிதியென்றும்
சர்வேந்திரியாதிகளுந் தனக்குள்ளே யொடுங்கலால் சர்
வசங்காரனென்றும் நாமந்தரித்தது.

அப்படியானால் சகலதுரிசுகளுமற்றச் சுத்தமானதுரி
யத்துக்கு இவ்வேழு உபாதிநாமங்கள் வருவானேனில்?
சர்வேந்திரியசர்வசராசரங்களும் தன்னிடத்திலேதோன்
றி, விளங்கி ஒடுங்கலாலும், அவைகள் தனக்கன்னியமே
னக்கண்டு சாட்சிமாத்திரமாயிருப்பதாலும், அத்துரிய
த்துக்கு அவ்வொரு தாடனமுண்டாய் உபாதிநாமங்க
ளைப்பொருந்தி பரனுக்கு உடலாச்சுதெனவறிக.

இப்படியான ஏழு உபாதியும் அது வென்கின்றப
ரசொரூபமல்ல. ஆனால் பரசொரூப மெதுவெனில்.
இந்த ஏழுஉபாதியும் யாதொரு சைதன்யத்திலே கண்
டு அளவிடப்படுகின்றதோ அதுவே பரசொரூபம்.

அந்தப்பரம் அவ்வுபாதியுடனே சம்பந்தித்தபோது
முக்கியமென்றும், அவ்வுபாதியைத் தவிர்ந்துநின்றபோ

து லட்சியமென்றும்; உபாதியை நானென்றபிமானித்தபோது அசுத்தமென்றும், உபாதியைக் கடந்தநின்றபோது சுத்தமென்றும், சொல்லப்படும்,

இப்படியிருந்தாலும், சீவபரனுக்கு உபாதிவேறுபட்டதுபோல சீவனுக்கும்பரனுக்கும் வேறுபாடின்றி ஒன்றாகவேயிருக்கும். இதற்குவேதப்பிரமாண முண்டா, உண்டு,

அதாவது, விசிட்டவாக்கியம் விடாதலக்கணை அதற்கு அர்த்தம்யாதெனில்? ஒரு சிவப்புக் குதிரையும் வெள்ளைப்பசுவும் கண்டாயா என்று எதிரிட்ட ஒருவனைக்கேட்க, அவன் வெள்ளைநிற்கின்றது, சிவப்புப்போகின்றது என அச்சத்தத்தால் வெள்ளைப்பசுநிற்கின்றது, சிவப்புக்குதிரைபோகின்றது, எனநிறமும்பசுவும் குதிரையும் ஒன்றாயிருப்பதுபோல, சீவனும் பரனும் ஒன்றெனவறிதலே யருத்தமாம்.

ஆகையால், காரணவுபாதித்தன்மையும், பரனுக்குண்டானமுக்கியமும், சுத்தாசுத்தமும், பரனுஞ்சீவனும் ஒன்றென்பதும், விசிட்ட வாக்கியத்தினுடைய விடாதலக்கணைக்கருத்தமும். உனக்குநாம் அனுக்கிரகித்தபிரகாரம் உன்னனுபவத்தைச் சொல்லென.

சுவாமி! தேவரீர் திருவாய்மலர்ந்தருளியதால்சிரவண த்திலே நன்றாகத்திடமாயிற்று.

தற்பத சிரவண முற்றிற்று.

---

## ௫ - இனி தற்பதமனனம்.

அதாவது, முன்காரியவுபாதியேழும் மூன்றவத்தை யானதுபோல, காரணவுபாதியேழும் மூன்றவத்தையா யிருக்கும்.

அதெப்படியெனில், சர்வக்ஞன், சர்வகாரணன், சர் வேந்திரியாமி, சர்வேசுரன், சர்வசிருட்டி, சர்வதிதி, சர் வசங்காரன் என்னும் எழுவுபாதியுடன் சம்பந்தித்தபுரு டன் பரசாக்கிரமெனவிளங்கும், இந்தப்பரசாக்கிரத்தை நானென்றபிமானித்தபரனுக்கு அபிமானநாமம் விராட் டென்றறிக.

இனி பரசொப்பனமாவது, இந்தஎழு உபாதியில்நா ன்கு உபாதியும்நீங்க சர்வசிருட்டி, சர்வதிதி, சர்வசங் காரம் என்றமூன்று உபாதியுடன் சம்பந்தித்தகாலபரம் பரசொப்பனமென விளங்கும், இந்தப்பரசொப்பனத் தை நானென்றபிமானித்தபரனுக்கு அபிமானநாமம் இரணியகர்ப்பனென்றறிக,

இனி பரசுழுத்தியாவது; இந்தமூன்று உபாதியில் இரண்டு உபாதியும் நிற்க, சர்வசங்காரமாகிய ஒருஉபாதியுடன் சம்பந்தித்துநின்ற வியோமம்பரசுழுத்தியெனவிளங்கும், இந்தப்பரசுழுத்தியை நானென்றபிமானித்த பரனுக்கு ஆபிமானநாமம் அவ்வியாகிர்தனென்றறிக.

ஆகையால் இந்தமூன்றவத்தையும், மூன்றபிமானநாமமும், பரனுக்கு முக்கியமும், அசுத்தமுமாம், ஆகையால் இதுபரசொரூபம் அல்ல;

இனி பரசொரூபம் யாதெனில், இந்தமூன்றவத்தையையுங் கண்டிகழ்ன்று மேலாய்நின்று விளங்கிய சுத்தஅறிவானதே, அதுவென்ற பரசொரூபம்.

அதெப்படியெனில், ஏழு உபாதியுடன் சம்பந்தித்து விளங்கியபுருடன் பரசாக்கிரம இந்தப் பரசாக்கிரம்பரசொப்பனத்தி லழியுமென்று உன்னலறியப்படுவதால் பரசாக்கிரம் பரசொரூபமல்ல இதில் அபிமானநாமமும் பரத்துக்கில்லை

இனி மூன்று உபாதியுடன் சம்பந்தித்துவிளங்கியகால பரம் பரசொப்பனம்? இந்தப்பரசொப்பனம் பரசுழுத்தியி லழியுமென்று உன்னலறியப்படுவதால் பரசொப்பனம் பரசொரூபமல்ல, இதிலபிமானநாமமும்பரத்துக்கில்லையென்றறிக.

இனி ஒரு உபாதியுடன் சம்பந்தித்துவிளங்கியவியோமம் பரசுழுத்தியென்றும், இது அறிவிறந்து நின்ற துரியாதீதமென்றும், உன்னாலறியப்படுவதால் இப்பரசுழுத்தியும் பரவுடலேதவிரப் பரரூபமல்ல, இதில் அபிமான நாமமும் பரத்துக்கில்லையென்றறிக.

இவையாவும் பரரூபமல்லவாயின் இனிப் பரரூபந்தான்யாதெனில்.

இந்தமூன்றவத்தையுங் கண்டுகழன்று மேலாய் நின்றுவிளங்கிய லட்சிய சுத்தம் ஆனபரதுரியமே அதுவென்கின்ற பரசொரூபம்? இந்தப்பரசொரூபத்தை மனதில் திடப்படத்தரித்து அநுபவித்திரு.

தற்பதமன்னமூர்த்திற்று.

---

## ௬ - இனிதற்பதநிதித்தியாசனம்.

அதாவது, முன்சொன்ன உபாதித்தன்மையும் அவத்தை நிலைகளும், அபிமானநாமமும், இவையெல்லாங்கண்டு கழன்று துரிசற்று மேலான பரதுரியதரிசனம் உனக்குச்சிரவணத்திலே கேள்விப்பட்டுமனதில் தரிப்பதாக

நாம் உனக்கு அனுக்கிரகம் பண்ணினபடி உன்மனதில் திடப்படத்தரித்ததைச்சொல்லென.

சுவாமி; தேவரீர் திருவாய்மலர்ந்தருளியதால், புடம் வைத்த பொன்னுக்கு மாற்றேறியதுபோல அடியேனுக்கு மனதில் திடமாகத்தரித்தது.

அதாவது, பரவுபாதியேழும் சம்பந்தித்துவிளங்கியபு ருடன் பரசாக்கிரமென்றும், இந்தப்பரசாக்கிரத்தை அபிமானித்தபரனுக்கு அபிமானநாமம் விராட்டென்றும் கண்டேன், இந்தப்பரசாக்கிரம் பரசொப்பனத்தில் அழிந்ததுங்கண்டேன், இதில் அபிமானநாமம் பரத்துக்கில்லையென்பதுங்கண்டேன்,

இனி மூன்று உபாதி சம்பந்தித்துவிளங்கிய காலபரம் பரசொப்பனமென்றும், இந்தச் சொப்பனத்தை அபிமானநாமம் இரணிய கர்ப்பனென்பதுங் கண்டேன், இந்தப்பரசொப்பனம் பரசுழுத்தியில் அழிந்ததுங்கண்டேன், இதில அபிமான நாமம்பரத்துக்கில்லையென்பதுங்கண்டேன்.

இனி ஒரு உபாதியுடன் சம்பந்தித்துவிளங்கியவியோமம்பரசுழுத்தியென்றும், இந்தப்பரசுழுத்தியைஅபிமானித்தபரனுக்கு அபிமானநாமம் அவ்வியாகிருதனென்

றுங்கண்டேன், இந்தப்பரசமூத்தி பரதுரியத்தில் அழி
ந்ததுங்கண்டேன், இதி லயமானநாமம் பரத்துக்கில்லை
யென்பதுங் கண்டேன்.

இனி இந்தப்பரசமூர்த்தியான வியோமத்தை யிதுவெ
னக்கண்டேன், கண்டு மேலாய்நின்று சர்வமூர்த்தன்மய
மாய்த் தனக்கன்னியமில்லாமல் எல்லாந்தானாகிவிளங்கி
வரவுபோக்கின்றி உள்ளும்புறம்புந் தானாகிநின்ற பரதுரி
யமான பரரூபத்தை அடியேன் உள்ளங்கைரத்நம்போ
லக்கண்டேன், சுவாமிகளினதுகிருபையால் பரமுத்தனா
னேன். என—ஆகையால் உனக்குப்பரபோதம் நன்றா
விளங்கிற்றென்றறி.

தற்பதவிதித் தியாசன முற்றிற்று.

---

சுவாமி? தொம்பதசுத்தார்த்தமான ஜீவதுரியத்தையு
ம், தற்பதசுத்தார்த்தமான பரதுரியத்தையும், அறிந்தே
ன். இனி யிதற்குமேலான சிவதுரியத்தையும் தரிசிப்பி
த்துச் சிவானுபவப்பேறு பெறும்படி கிருபை செய்யவே
ண்டுமென்று சீடன் விண்ணப்பஞ்செய்யக் குருநாதன்
அருளிச்செய்கின்றார்,

---

## எ - இனி அசிபதசிரவணம்.

அஃதாவது; முன்சொன்ன தற்பதசுத்தமானபரன் பரிபூரணமாகவும், எல்லாந்தானகவும், விளங்கினலும். அந்தப்பரனுக்கு ஒருவாசனதோஷம் உண்டு, அது யாதெனில்?

எல்லாம் தானக விளங்குகின்றேமென்னும்கொள்கையினலும், ஆனய் என்ற சிவத்துக்குத்தான மூன்றுதேகமாய் அவத்தைக் குறிகளைக்கொண்டு நிற்கையாலும், பரனுக்கு இந்தவாசனதோஷம் உண்டென்றறி,

ஆகையால் இந்தத் தற்பதசுத்தமான பரம்பொருளானது அசிபதப்பொருளான ஆனய்என்ற சிவத்துக்குமூன்றதேகமாய் மூன்றவத்தையாய் விளங்கும்,

அதெப்படியெனில்? பரம், விசுவக்கிராசம், உபசாந்தம் எனமூன்றுவிதமாய் விளங்கும் ஆகையால் இந்தமூன்றும் சிவசொரூபமல்லவெனஅறிக.

அசிபதசிரவண முற்றிற்று,

## அ - இனி அசிபதமனனம்.

---

அதாவது, முன்சொன்ன தொம்பதத்துக்கும், தற்பதத்துக்கு-: மூன்றவத்தைகள் உண்டானதுபோலஅசிபதத்துக்கும் மூன்றவத்தைகள் உண்டாயிலங்கும்.

அதெப்பெடியெனில்? காண்பானும். காட்சிப்படுகின்ற சர்வசராசரப்பிரபஞ்சமும்; தானேயாகிப்பரிபூரணித்து விளங்கிய பரனேசிவசாக்கிரம்; இந்தச் சிவ்சாக்கிரத்தைத் தானென்று அபிமானித்து விளங்கிய கிவத்துக்கும் அபிமானகாமஞ் சிற்சொலிதையென்றறிக.

இனிச் சிவசொப்பனம் யாதெனில், முன்சொன்னசிவசாக்கிரமானபரன், சத்த, பரிச, ரூப, ரச, கந்தமென்னும் ஐவகைப்பொருளால் சமைவாதன சகலசகத்தையும்விழுங்கித் தானே சகரூபமாய்ச் சூரியனும் பிரபையும்பே, ல. மணியும் ஒளியும்போல. பண்ணும்இசையும் போல, அன்னியமறநின்று விசுவக்கிராசமே சிவசொப்பனம், இந்தச் சிவசொப்பனத்தைச்தானென்று அபி

மானித்த சிவத்துக்கு அபிமானநாமம் பிரசாபத்தியனெ
னஅறிக.

இனிச்சிவசுழுத்தி, அதாவது, இந்தப்பரன் எல்லாம்
தானாய் விளங்குகிறேனென்பதையுமறந்து. தன்னையும
றந்து, தன்னையுமிறந்து பரமாநிதமாய்ச்சாந்தப்படுவதா
னஉபசாந்தமே சிவசுழுத்தி, இந்தசிவசுழுத்தியைநாமெ
ன்றபிமானத்த சிவத்துக்கு அபிமானநாமம் பொற்புவி
சாந்தனென்றறிக.

ஆகையால் இந்தமூன்றவத்தையும் சிவரூபமல்ல; ஆ
னால் சிவரூபம்யாதெனில்; சர்வபரிபூரணமானபரம் சிவ
சாக்கிரமென்றும், இந்தச்சிவசாக்கிரம் சிவசொப்பனத்தி
லழியுமென்றும் உன்னால் அறியப்படுவதால் சிவசாக்கி
ரம் சிவரூபமல்ல; இதில் அபிமானநாமமும் சிவத்துக்கி
ல்லையென்றறிக.

இனிபரன்விசுவக்கிராசம்பண்ணியதே சிவசொப்பன
மென்றும், இந்தச்சிவசொப்பனம் சிவசுழுத்தியிலழியு
மென்றும், உன்னாலறியப்படுவதால், சிவசொப்பனமும்
சிவரூபமுமல்ல; இதில் அபிமானநாமமும் சிவத்துக்கில்
லையென்றறிக.

இனிவுபசாந்தம் சிவசுழுந்தியென்றும், இந்தசிவசுழுந்தி சிவதுரியத்தி லழியுமென்றும் கூறியதால் சிவசுழுத்தியும் சிவரூபமல்ல, இதில் அபிமானநாமமும் சிவத்துக்கில்லையென்பதறிக.

இவைகளும் சிவரூபமல்லவெனில் இனிச்சிவரூபந்தானியாது.

இந்த மூன்றவத்தையுங் கடந்த மேலான அறிவென்னுஞ் சிவதுரியமே சுயம்பிரகாசமான குருபாதமென்ற சிவரூபம்.

ஆகையால், இந்த அசிபதத்துக்கு வேதப்பிரமாண வாக்கியம் அகண்ட வாக்கியமென்றும் சோயம் தேவதத்தனென்பதுமே,

இதற்கருத்தம்யாது? தேவதத்தனென்னும் நாமமுடைய ஒருவன் ஒருகாலத்தில், ஒருதேயத்தில், ஒருபட்டணத்தில், கிரகஸ்தனாய்த் தனதுகிரியைசெய்துகொண்டிருந்தவிடத்திலும்; பின்பு ஒருகாலத்தில், ஒருதேயத்தில், ஒருபட்டணத்தில் சதுரங்கபலமுஞ்சேல்க்க, அதிகபிரதாபத்துடன், இராசாவாயிருந்த விடத்திலும், பின்

ஒருகாலத்தில், ஒருதேயத்தில், ஒருபட்டணத்தில் சர்வசங்க பரித்தியாகம் பண்ணிக்கொண்டு, தண்டுகமண்டலத்துடன், சந்யாசியாயிருந்தவிடத்திலும், அங்கங்கே கண்ட அடையாளங்களைப் பார்த்தறியும்போது, முன்கிரகஸ்தனாயிருந்தவனும், பின் இராசாவாயிருந்தவனும், பின்புசந்யாசியாயிருந்தவனும் ஒருதேவதத்தனேபோல் தற்பிரகாசமாய் விளங்கியபிரமம், அசித்துருவமான காரிய உபாதியைப் பொருந்தியவிடத்துக் கிஞ்சிக்ஞனாகியும், உபாதிநாமத்தை அபிமானித்துக்கொண்டு சீவனாகியும், அதற்குமேற்பட்டுச் சீவதுரியமாகியும், பின்பு சித்துருவமான காரண உபாதியைப் பொருந்தியவிடத்து சர்வஞ்ஞனாகி, உபாதி நாமத்தை அபிமானித்துக் கொண்டு பரனாகியும்; அதற்குமேற்பட்டுப் பரதுரியமாகியும், பின்பு இந்தப்பரனை அவத்தைகளாகப் பொருந்தியவிடத்து, அவத்தை நாமத்தை யபிமானித்துக்கொண்டு சிவனாகியும், அதற்குமேற்பட்டுச் சிவதுரியமாகியும், சுயம்பிரகாசமான சொரூபமாகியும், விளங்காநின்ற பிரமமென்றே,

எப்படி? முன்சொன்ன தேவதத்தனுக்கு மூன்று காலமும், மூன்றுதேயமும், மூன்று பிரபஞ்சமும், விட்டுப்போனவிடத்து ஒரு தேவதத்தனே யானதுபோலவே மூன்று உபாதியும், ஒன்பது அவத்தையும் ஒன்பதுஅபி

மானகாமமும், நிர்ச்சலிடத்தில் சீவதுரியம். பரதுரியம். சிவதுரியமென்னுமுத்துரியமுமாய் அகுதமுத்துரியமென்னப்படுகிற, சுத்த அறிவாகாரமான பிரமமேயான சிவானுபவத்தைக்கண்டு மனதில் திடப்படத்தரித்திரு.

அசிபதமனனம் முற்றிற்று.

---

## ௯ இனி அசிபதநிதிதியாசனம்.

அதாவது. உனக்கு நாம்சொன்னபடி; அசிபதத்தினுடைய அவத்தைநிலைகளும், அபிமானநாமக்குறிகளும், அகண்டவாக்கியத் தன்மையும், விட்டுவிடாத லக்கணையும், கண்டுகழன்றமேலான சொரூபாதமான சிவதுரிய மென்னும் சுயம்பிரகாசதரிசனமும், சீவதுரியமென்னுஞ்சீவனும், பரதுரியமென்னும்பரனும், சிவதுரியமென்னும் சிவமும். ஒருசொரூபமேயென்றுஅகண்டவாக்கியத்தினால் தேவதத்தனைப்போலக் கண்டிடும். நீசிரவணத்திற்கேட்டு மனதிற்றரித்ததைச்சொல்லென,

சீடன் விண்ணப்பஞ்செய்கின்றான்.

சர்வபரிபூரணமாய், காண்பானுங் காட்சியுந் தானாய் நின்ற பரசொரூபத்தைச் சிவசாக்கிரமென்றும், இந்தச் சாக்கிரத்தை நானென்றபிமானித்த சிவத்துக்கு அபிமான நாமஞ்சிற்சொலிதை யென்றுங் கண்டேன்; இந்தச் சிவசாக்கிரம் சிவசொப்பனத்தி லழிந்திருதுங்கண்டேன்.

இனிமுன்சொன்ன சர்வபரிபூரணமானவிசுவமென்னுஞ் சகத்தைவிழுங்கித் தான் சகசொரூபமாய்நின்ற விசுவக்கிராசத்தைச்சிவசொப்பனமென்றும், இந்தச்சிவசொப்பனத்தை நானென்றபிமானித்த சிவத்துச்கு அபிமான நாமம் பிரகாபத்தியென்றுங்கண்டேன். இந்தச்சிவசொப்பனம் சிவசுழுத்தியில் அழிந்ததுங்கண்டேன்.

இனி சகலலோகமும் சகலாகாரமும் தன் வடிவேயெனக்கண்டு விளங்கியபோன், எல்லாம் தன்மயமே யென்பதையும்மறந்து, தன்னையுமறந்து, தன்னையுமிறந்து, சாந்தமான உபசாந்தசந்தத சிவசுழுத்தியென்றும், இந்தச் சிவசுழுத்தியைத் தானென்றபிமானித்த சிவத்துக்குஅபிமானநாமம் பொற்புவி சாந்தனென்றுங்கண்டேன், இந்தச்சிவசுழுத்தி சிவதுரியத்தில் அழிந்ததுங்கண்டேன்.

இனி இந்த மூன்றவத்தையுங் கண்டு கழன்றுமேலாய் நின்று சற்பிரகாசமாய் விளங்கிய சிவதுரியமான குருசொரூபத்தையுங்கண்டேன்; சீவதுரியம், பரதுரியம், சிவதுரியம் எனனும முத்துரியமுமாய் இந்த மூன்றுதுரிய

முமிறந்து, ஏகவடிவான பிர்மசொரூபத்தையுங்கண்டேன் ; சுவாமிகளினது பெருங்கருணையாலே சிவானுபவப்பேறும்பெற்றுச் சிவரூபமானேன் என.

இனி நீ பெற்ற தற்பிரகாசமான குருசொரூபம் எப்படியிருந்ததெனில் ?

நிராமயமாய், நிராதாரமாய், சர்வமும் பிரமப்பிரகாசமாய் விளங்குகின்றதென,

ஆகையால் இதுவே சத்தியம், ஞானம், அனந்தம். ஆனந்தம், என்றும், சகசீவபரம் என்றும், விளங்காநின்ற பொருளும், இதுவே தொம்பதமும், தொம்பதார்த்தமும், தற்பதமும், தற்பதார்த்தமும், அசிபதமும், அசிபதார்த்தமும், உபாதிபேதமும், அவத்தை நிலைகளும், அபிமானிகளும். இதற்குமேற்பட்ட மூன்றுதுரியமுமாய்விளங்கியபொருளும். தற்பிரகாசமான பிரமமே, சகலவேதாகம சாத்திரபுராணங்களும் சட்சமய விகற்பங்களும், அவைகளிற் பேதமாயிருந்தபொருளும் இதுவே, இப்படியேயிரு.

நாமங்களினாற் குறிக்கப்படாமல், தற் பிரகாசமாய் விளங்கியது, எப்படியிருந்தது, சொல்லென

இந்தச் சொரூபத்தை அடியேன் மனதால் எண்ணவும், வாக்காற்சொல்லவும், இடமில்லாம லிருக்கின்றது. ஆகையால், இதுவேமவுனமுத்திரையென்பது.

அதெப்படியெனில்? மனமும், மனதினாலெண்ணப்படுவதும், வாக்கும், வாக்கினாற் சொல்லப்படுவதும், காயமும், காயத்தினாற் செய்யப்படுவதும், சுத்த அறிவான பிரமமே.

ஆகையால் மனம், வாக்கு, காயம், மூன்றுமிறந்து, வாக்குமனோதீதமாய், தற்பிரகாசமானசொரூபமானதே மவுனமுத்திரை, இதுவே மவுனமுத்திரையென்றுகண்ட கருத்தையும்விட்டுச் சும்மாயிருந்தபடியேயிருப்பதே மோட்சம்; இதுவேசித்தாந்தம்.

வேதாந்தத்துண்மைதெளிந்தபிரமதெரிசனம்.

முற்றிற்று.

குருவேதுணை.



உ

கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

ஸ்ரீசேஷாத்திரிசிவனாரருளிச்செய்த

தத்துவக்கட்டளையென்று வழங்காநின்ற

# நாஞசிவவாதக்கட்டளை.

---

(க-வது) சுத்தப்பிரமமாயிருக்கின்ற சர்வசாட்சியினி டத்திலே அக்கினியிற் சூடுபோல அபின்னமாகவொரு சத்தியுண்டு. அந்தச்சத்தி அதீதப்பிரமத்திலடங்கியிருக் கும்போது சுத்தப்பிரமமென்று பெயர். இந்தச்சத்தி விசிரிம்பித்துச் சுத்தப்பிரமத்தைவியாபிக்கும்போது, ப ரை வியாபகத்துக்குள்ளிருந்தபடியினாலே பரப்பிரம மென்று பெயராயிற்று.

(உ-வது) இலட்சண சூனியமாயிருக்கின்றவிந்தச்சத் திக்குப் பிரமத்தினுடைய சந்நிதானத்திற் பருவசமுகத் திலே ஸ்திரீக்கு ருதுசஞ்சனித்தாற்போல விகிர்தகுண மற்ற சாத்த, ரச, தமோ, குணமுண்டாயின. இந்தச்சுத்த சாத்தத்திற்கு ஆநந்தரூபசத்தியென்றுபெயர். சுத்தராசத்தி ற்குச்சித்துரூபசத்தியென்றுபெயர். சுத்ததாமத்திற்குச்சத்

துரூபசத்தி யென்றுபெயர். இந்தக்காரணமான வாநந்தரூபசத்தியுடனே பரப்பிரமங்கூடிச் சர்வாநந்த சமுத்தியை யடைகின்றபோது, பரப்பிரமென்கிற பெயர் போய்ப் பரமாநந்தரென்கின்ற பெயர்வந்தது. இந்தப் பரமாநந்தர் சித்துரூபசத்தியுடனேகூடிச் சர்வப்பிரகாசமென்கின்ற சொப்பனவத்தையை யடைகின்றபோது பரமாநந்த ரென்கின்ற பெயர்போய் பரிபூர்ணரென்கின்ற பெயர்வந்தது. இந்தப் பரிபூரணர் சத்துரூபசத்தியுடனேகூடிச் சர்வவியாபகமென்கின்ற சாக்கிராவத்தையை யடைகின்றபோது, பரிபூரணரென்கின்ற பெயர்போய்ப் பரனென்கின்ற பெயர்வந்தது.

(௬-வது) இந்த அகண்டபரிபூரண சச்சிதாநந்தப்பிரமத்தினிடத்தில் சுத்தியில் இரசிதந் தோன்றினாற்போல மூலப்பிரகிருதி யென்றொரு சத்தியுண்டாயிற்று. அந்த மூலப்பிரகிருதியும் விகிர்தகுணமாகிய முக்குணத்துடனே கூடியிருக்கும். அந்தப்பிரகிருதியின் சாத்துவிதகுணத்தை மாயையென்றும், சர்வக்ஞவுபாதியென்றும் ஈசுரகாரணசரீரமென்றுஞ்சொல்லப்படும். இந்த மாயையினிடத்திலே நிர்மலசலப்பிரதிவிம்பம்போலப் பிரமஞ் சுலட்சணமாகப்பிரதிவிம்பிக்கும். இந்த விம்பசைதன்யத்தைச் சர்வக்ஞராகிய ஈசுரனென்று சொல்லப்படும்.

(௪-வது) இச்சச் சாத்வீககுண மாயையினிடத்திலே சாத்திகத்திற்சாத்திகம், சாத்திவிராசதம், சாத்திகத்திற்றாமதமென்று மூன்றுகுணமுண்டாயின, இதிற் சாத்திகத்திற் சாத்திகம் பிரதானமாகும்போது, அதிற்பிரதிவிம்பித்த வீசுரன் சகத்தை இரட்சிக்கையினால் விஷ்ணுவென்று சொல்லப்படும். சாத்திகத்திவிராசதம் பிரதானமாகும்போது; அதிற் பிரதிவிம்பித்த வீசுரன் சகத்தைச் சிருஷ்டிக்கையினால் பிரமாவென்று சொல்லப்படும். சாத்திகத்திற்றாமதம் பிரதானமாகும்போது, அதிற் பிரதிவிம்பித்தவீசுரன் சகத்தை யுபசங்காரம் பண்ணுகையினால்உருத்திரனென்றுசொல்லப்படும். இப்படி மூலப்பிரகிருதியின் சாத்திககுணகற்பனைசொல்லப்பட்டது.

(௫-வது) இனி மூலப்பிரகிருதியி னிராசதகுண மநேகரூபமாய்ப்பிரிந்து அவித்தைகளென்றுஞ், சீவகாரண சரீரங்களென்றும்; ஒன்றுக்கொன்றுதாரதம்மியமாகச் சொல்லப்படும். இந்த அவித்தைகளிடத்திலும் மலினசலப் பிரதிவிம்பம்போலப் பிரமசைதன்னியம் பிரதிவிம்பிக்கும் இந்தவிம்பசைதன்னியங்களைக் கிஞ்சிக்ஞரென்றுஞ், சீவசிதாபாசரென்றும், பிராக்ஞரென

றுஞ்

சொல்லப்படும். இந்த அவித்தைகளிடத்திலேயும் இராசதத்திற்சாத்திகம், இராசதந்திலிராசதம், இராசதத்திற்றாமதமென்று மூன்றுகுணமுண்டு இராசதத்திற் சாத்திகம் பிரதானமாகும்போது அதிற் பிரதிவிம்பித்த சிதாபாசன் தத்துவக்ஞான நிஷ்டனுவன். இராசதத்தி லிராசதப்பிரதானமாகும்போது அதிற்பிரதிவிம்பித்தசிதாபாசன் காமக்குரோதபராயக்கன்மநிஷ்டனுவன். இராசதத்திற்றாமதம் பிரதானமாகும்போது அதிற்பிரதிவிம்பித்த சிதாபாசன் சோம்பல், நித்திரை, மயக்கங்களை யடைவன். இப்படி மூலப்பிரகிருதியி னிராசதகுணகற்பனை சொல்லப்பட்டது.

(௬௮-வது) இனி மூலப்பிரகிருதியின் றாமதகுணத்திற்கு ஆவரணம் விட்சேபமென்றிரண்டு சத்திகளுண்டு. இதில் ஆவரணசத்தியென்பது சத்துவக்ஞானியையும் ஈசுரனையுந்தவிர, மற்றச்சீவருக்கெல்லாஞ்சரீரத்திரயம், சிதாபாசன், சாட்சி, சைதன்யங்களையொன்றுக்கொன்றும்பதந் தெரியவொட்டாமல்மறைக்கும். இதனுல்மறைபட்டசீவன் இருபத்தொன்பது தத்துவங்களையு மொருமைப்பாடாக நானென்றபிமானிப்பன். இந்த வபிமானத்தை யகங்காரக் கிரந்தியென்றும், சம்சாரபந்தமெ

ன்றுஞ், சொல்லப்படும். சத்குருகடாட்சத்தினாலே இந்த ஆவரணநீங்கி இருபத்தொன்பது தத்துவத்திற்குமொன்றுக்கொன்று பேதந்தெரிகின்றதே முத்தி. இப்படி ஆவரணசத்தியின் காரியஞ் சொல்லப்பட்டது.

(எ-வது) இனி விட்சேபசத்தியினிடத்தில் சத்த தன்மாத்திரையான வாகாசப்பிறந்தது. ஆகாசத்தில் பரிச தன்மாத்திரையான வாயுபிறந்தது. வாயுவில் ரூபதன்மாத்திரையான அக்கினிபிறந்தது. அக்கினியில்ரசதன் மாத்திரையானஅப்பு பிரந்தது. அப்புவில்கந்ததன்மாத்திரையான பிருதுவிபிரந்தது. இந்த சூட்சுமபஞ்ச பூதத்திற்கு காரணமாயிருக்கின்ற விட்சேபசத்தியினிடத்திலே தாமதத்திற்சாத்திகம், சாமதத்திலிராசதம், தாமதத்திற்றமதமென்று அற்பங்கருவிருந்தபடியினாலே அதன்காரியமானஇந்தத்தன்மாத்திரையானபஞ்சபூதங்களும்முக்குணத்துடனே பிறந்தன. இந்த பஞ்சபூதங்களுக்குத் தன்மாத்திரைகளென்றும், அபஞ்சீகிர்தபூதங்களென்றுஞ், சூட்சுமபூதங்களென்றும், முக்குணபூதங்களென்றுஞ்சாஸ்திரங்களிலே சொல்லப்படும்.

(அ வது) இந்தச் சூட்சும பூதங்களினின்று சூட்சும சரீரங்களுந் தூலபூதங்களும் பிறந்தன. அதெங்ஙனமெ

ன்னில், ஆகாச முதலான பஞ்சபூதங்களினுடைய சாத்திகாம்சத்திலே பூதத்திற் கோரொருமாத்திரையெடுத்து ஒன்றாகக்கூட்டிவைத்தது அந்தக்கரணம்.

இந்த அந்தக்கரணத்திலாகாசத்தினம்சங் கூடினதற் கடையாளம், இந்த அந்தக்கரணமும் ஆகாசத்தைப்போலச் சகலமான கேள்விக்கு மிடங்கொடுத்துத்தரிக்கின்றது. இப்படி தரிக்கின்ற விருத்திக்குத் தேயுசவென்று பெயர்.

இந்த வந்தக்கரணத்தில் வாயுவினம்சங்கூடினதற் கடையாளம், இந்த வந்தக்கரணமும் வாயுவைப்போலஅலைகிறது. இப்படி யலைகின்ற விருத்திக்கு மனமென்று பெயர்.

இந்த வந்தக்கரணத்தில் அக்கினியினம்சங்கூடினதற் கடையாளம், இந்த வந்தக்கரணமும் அக்கினியைப்போல் இது இன்னதென்று விளக்குவிக்கிறது. இப்படி விளக்குவிக்கின்ற விருத்திக்குப்புத்தியென்றுபெயர்.

இந்த வந்தக் கரணத்தில் அப்புவினம்சங் கூடின தற் கடையாளம், இந்த வந்தக்கரணமும் அப்புவைப்போல விடயங்களிற்பற்றியிழுக்கின்றது. இப்படி இழுக்கின்ற விருத்திக்குச் சித்தமென்று பெயர்.

அபானவாயு, அக்கினியினம்சமானபடியினாலே அக்கினியைப்போலச் சாடராக்கினியாக வஷ்ணித்துக்கொண்டு குசத்தைப் பற்றிநின்று உண்ட அன்னபானாதிகளைச் சீரணிப்பிக்கும்.

சமானவாயு. அப்புவினம்சமானபடியினாலே சரீரநடுவானநாபித்தானத்தினின்று உண்ட அன்னபானாதிகளைச் சகல நாடிகளிலும் அப்புவைப்போல இழுக்கும்.

உதானவாயு, பிருதுவியினம்சமானபடியினாலே கண்டத்தைப்பற்றிநின்று பிருதுவியைப்போலக்கடினமாக நின்று கடையும்.

இந்தப்பஞ்சவாயுக்களையுமல்லாமல்வாந்திபண்ணிவைக்கின்றவன்நாகனென்றும், இமைத்து விழிக்கின்றவன் கூர்மனென்றும், துறுதுறுத்துத் தும்முகின்றவன் கிரிகரனென்றும், கொட்டாவிகொள்ளுகின்றவன் தேவதத்தனென்றும், வீங்குவிக்கின்றவன்தனஞ்செயனென்றும், வேறேயைந்து வாயுக்களுண்டென்றுசிலர் சொல்லுவர். இந்தவைந்தும் பிராணனுடைய தொழிலானபடியினாலே வேறல்ல.

(௰௧-வது) இன்னம் ஆகாசமுதற் பஞ்ச பூதங்களினுடையவிராசதாம்சத்திலே பூதத்திற் கோரோருமாத்திரையெடுத்துத் தனித்தனியேவைத்ததுவாக்காதிகன்மேந்திரியமென்று சொல்லப்படும்,

இதிலாகாசத்தினிடமாக வாக்குவசனிக்கும்,.
வாயுவினிடமாகப்பாணிபிடித்தலேற்றல் செய்யும்.
அக்கினியினிடமாகப் பாதம் நடக்கும்.

அப்புவினிடமாகப் பாயுருமலசலாதிகளைவெளியிலே யிழுக்கும்.

பிருதுவியினிடமாகவுபத்தஞ்சுகத்தைப்பண்ணும்.

இந்தவைந்தும் தனித்தனியே யிருந்துகொண்டுமேற தொழிற் செய்யமாட்டாதவியானதினாலாயு வைந்துமா த்திரையுமொன்றாய்க்கூடினதுகொண்டு கன்மேந்திரி யமைந்தின் வழியினாலைந்து தொழில்களையுஞ்செய் து முடிக்கின்றது இந்தவாயுக்களைந்துங் கன்மேந்திரி யமைந்தும் ஆகப்பத்து மிராசதாம்ச மானபடியினாற் கி ரியாசாதனமாயின.

(௧௨-வது) அந்தக்கரணம் ௫-ம். ஞானேந்திரியம் ௫-ம் வாயுக்கள் ௫ ம்கன்மேந்திரியம், ௫ - ம் ஆக உ௰ தத்து வமும் சூட்சுமசரீரமென்றுசொல்லப்படும். இந்தச்சூட்சு மசரீரத்தை மாயாப்பிரதிவிம்பராகவிருக்கின்றவீசுரன், அவித்தையாப் பிரதிவிம்பராயிருக்கிற சீவருக்குப்பே ருக்கொவ்வொரு சரீரஞ் சிருஷ்டித்துக்கொடுத்தார். அப் போது பஞ்சபூதத்தினுடைய சாத்திகாம்சமு மிராசதாம் சமும் செலவழிந்தன. தாமதகுணமாத்திரஞ் சேடித்தது.

சூட்சுமசரீரம் வாங்காத சீவருக்கெல்லா மின்னமொரு சிருஷ்டிக் காகட்டுமென்று நிறுத்தினர். இப்படி சூட்சும சரீரஞ்சொல்லப்பட்டது.

(௧௬-வது) இனித் தூல பூத வுற்பத்தி சொல்லுகிறோம். அதெங்ஙனமெனில், மிஞ்சின தாமதமாயிருக்கின்ற வைந்துபூதத்தையு மொவ்வொன்றிரண்டாகப்பகுத்து, முதற்பாதியைந்தையு மொவ்வொன்றுநாலாக்கி யிரண்டாம்பாதியைந்துடனே தன்னம்சத்துடனே கூட்டாமல் மற்ற நாலுபூதத்துடனும் பூதத்திற்கரைக்கால் மாத்திரையாகக்கொடுக்கின்றது. பஞ்சீகரணமென்று சொல்லப்படும்.

இப்படிப் பஞ்சீகரணம் பண்ணின தூலபூதங்களிலே ஆகாசத்திலே பரிச ரூப ரச கந்தமாகிய நான்கு குணமும் வியாப்பியமான படியினால் அதிரிசியமாய்ப்போக, நிச குணமாகிய சப்தமும்,

வாயுவிலே ரூபரசகந்தமாகிய மூன்றுகுணமும் வியாப்பியமான படியினால், அதிரிசியமாய்ப்போகக்காரண குணமாகிய சப்தமும்,நிசகுணமாகியபரிசமும்;

அக்கினியிலே ரசகந்தமாகிய விரண்டுகுணமும் வியாப்பிய மானபடியினால் அதிரிசியமாய்ப்போகக் காரண குணமாகிய சப்தபரிசமும், நிசகுணமாகிய ரூபமும்,

அப்புவிலே கந்தகுணம் வியாப்பியமானபடியினால் அதிரிசியமாய்ப்போகக் காரணகுணமாகிய சப்தபரிச ரூபமும், நிசகுணமாகியரசமும்;

பிருதுவியிலே சப்த பரிச ரூப ரச கந்தமுந்தோன்றின.

(௧௪-வது) முன்சூட்சமபூதத்திலிருந்து சூட்சமசரீரம் பிறந்தாற்போலப் பஞ்சீகரணப்பண்ணின தூலபூதத்தினின்றும் ஆறுதத்துவமாய். நால்வகைப்பிறப்பாய், மூவகைச்சாதியாயிருக்கின்ற தூலசரீரங்கள்பிறந்தன.

(௧௫-வது) இதிலாறுதத்துவமாவ தேதென்றால்; சர்மம், உதிரம், மாமிசம், சனுயு, அத்தி, மச்சை இந்த ஆறுவகையுந்தூலசரீரம்,

நால்வகைத் தோற்றமாவதே தென்றால் சராயுசம், அண்டசம், சுவேதசம், உற்பீசம் ஆக நாலு.

மூன்றுசாதியேதென்றால் இகலோக பரலோகபுத்தி இருவகையுங் கொடுக்கின்ற மானிடசரீரம் உத்தமசாதி. பரலோக புத்தியை மறைத்து இகலோகபுத்திமாத்திரம் அறிகின்ற பசுபட்சி முதலானவைமத்திமசாதி; இரண்டு லோகத்துப்புத்தியையும்மறைத்திருக்கின்றமரம்.கொடி, செடி, அதமசாதி இப்படிப்பிருதுவி தத்துவமாயிருக்கின்ற பூலோகத்திற் கண்டாற்போல உப்பு, அக்கினி, வாயு

ஆகாசமென்னப்பட்ட தத்துவங்களிலும் நிறை நிறைபோ பிதிர்லோகம், தெய்வலோகம், யட்சகந்தருவலோகம், சித்தர்லோகங்களிலும், நட்சத்திரமாகத்தோற்றுகின்ற சந்திரன்முதலானபிதிர்கள், சூரியன்முதலான தேவதைகள் கந்தருவர், சித்தர் என்னப்பட்டதெல்லாம் உத்தமசரீரம். காமதேனு, அயிராவதம், அன்னம், கருடன் முதலாயின மத்திமசரீரம்; கற்பகவிருட்சம், பாரிசாதமுதலாயின அதமசரீரம்.

(௧௬-வது) இந்தத்தூலசரீரமே அன்னமயகோசம் சூட்சுமசரீரம் மூன்றுகோசமாயிருக்கும். அதெங்ஙனமெனில் பிராணவாயுவுங் கன்மேந்திரியமுங் கூடிப்பிராணமய கோசம் மனதும் ஞானேந்திரியமுங்கூடி மனோமயகோசம், புத்தியும் ஞானேந்திரியமுங்கூடி விஞ்ஞானமயகோசம்.

காரணசரீரமே ஆநந்த மயகோசம், இப்படிப் பஞ்சகோசஞ் சொல்லப்பட்டன.

(௧௭-வது) ஆறுதத்துவமாயிருக்கின்ற தூல சரீரத்திலே சூட்சுமசரீரமிருக்கின்றதெப்படியென்னில்;

கன்மேந்திரியமான வாக்கும் ஞானேந்திரிய மான சிங்குவையும் வாயிலிருக்கும்; உதானவாயுவும் மனதுங் கண்டத்திலிருக்கும்; பிராணவாயுவும் புத்தியும் இருதயத்திலி

ருக்கும்; சமானவாயுவுஞ்சித்தமும் நாபியிலிருக்கும்; அபானவாயுவும் பாயுருவுங் குதத்தி லிருக்கும், வியான வாயுவும் ஞானேந்திரியமான துவக்கும் அகங்காரமுஞ் சர்வாங்கமும் வியாபித்திருக்கும்; உச்சியிலே தேயுவுங் கருவிழி னுனியிலே சட்சு யிந்திரியமும், காதுக்குள்ளே சுரோத்திர இந்திரியமும். மூக்குக்குள்ளே ஆக்கிராண இந்திரியமும் கழுத்துக்குமேற் றனித்தனியே யிருக்கும், கழுத்துக்குக்கீழே கை. கால் குய்யத்திற் முறையே பாணி பாதம், உபத்தம், மூன்றும் தனித்தனியேயிருக்கும் இப்படித்தூலசரீர தத்துவம் ௯-ம், அதிற்குடிபுகுந்த சூட்சுமசரீரதத்துவம் உ௰-ம். ஆகதத்துவம் உ௯-ம், பஞ்சபூதத்தின் காரியமானபடியினாலே ஒருமைப்பாடாகக் காரியசரீரமென்று சொல்லப்படும்.

(க௮-வது) காரணசரீரமுஞ் சிதாபாசனுஞ் சாக்கிரத்திலே இந்தஇருபத்தாறுதத்துவத்துடனே கலந்து நின்றபோது விசுவனென்றும், வியவகாரிகசீவனென்றுஞ் சொல்லப்படும்.

சொப்பனத்திலே தூலசரீரத்தைக் கைவிட்டு அந்தக்கரணத்துடனே கூடிநின்றபோது தைசதனென்றும், பிராதிபாதிக சீவனென்றும், சொப்பனகற்பிதனென்றுஞ், சொல்லப்படும்.

சுழுத்தியிலேகாரியசரீர மிருபத்தாறையுங்கைவிட்டுக் காரண சரீரத்தைமாத்திரம் பொருந்தியிருக்கும்போது பிராக்ஞனென்றும், பாமார்த்திக சீவனென்றுஞ்சொல்லப்படும்.

பிரமசைதன்னியஞ் சாக்கிரத்துக்குச் சாட்சியாயிருக்கும்போது சீவாத்மாவென்றும், சொப்பனத்துக்குச் சாட்சியாயிருக்கும்போது அந்தராத்மாவென்றும், சுழுத்திக்குச் சாட்சியாயிருக்கும்போது பரமாத்மா வென்றும் அவத்தாத்திரய சாட்சியாயிருக்கும்போது ஞானாத்மாவென்றும், கூடத்தரென்றுஞ்சொல்லப்படும்.

இப்படிச் சீவனுக்கு மூன்றுசரீரமும் மூன்றவத்தையுஞ் சொல்லப்பட்டது.

(கக-வது) இனி ஈசுரனுக்குமூன்றுசரீரமும் மூன்றவத்தையுஞ்சொல்லும்படி;—

லோககற்பனையாகத் தோற்றுகின்ற நாமரூபஞ்சபூதங்களும் அதிற்றோன்றின, மூன்றுசாதியாயிருக்கின்ற தூல சரீர சமஷ்டியுங்கூடி ஈசாதூலசரீரமென்றும், விராட்டென்றுஞ் சொல்லப்படும். இதனுடனே கூடிச்சாக்கிராவத்தையைப் பொருந்தியிருக்கின்ற ஈசரன் வைசுவானரனென்றும், இந்த இருவகைக்கும் அதிஷ்டானசைதன்யம் பிரமாவென்றுஞ் சொல்லப்படும்,

சூட்சுமபூதங்களைந்தும் அதிற்றோன்றின சூட்சுமசரீ ரசமஷ்டியுங்கூடி ஈசுர சூட்சுமசரீரமென்றும், இரணி யகர்ப்பனென்றும், சொல்லப்படும். இதனுடனேகூடி சொப்பனவத்தையைப் பொருந்தியிருக்கின்ற வீசுரன் சூத்திராத்மாவென்றும், இந்த இருவகைக்கும் அதிஷ் டானசைதன்யம் விஷ்ணுவென்றுஞ்சொல்லப்படும்.

இந்தத்தூலசூட்சும விருவகைக்கும் வாசனையுடனே கூடின மாயை யீசுரகாரண சரீரமென்றும், அவ்வியாகி ருத மென்றுஞ் சொல்லப்படும். இதனுடனே கூடிச் சுழுத்தியவத்தையைப் பொருந்தியிருக்கின்ற வீசுரன் அ ந்தரியாமியென்றும், இந்த இருவகைக்கும் அதிஷ்டான சைதன்யம் உருத்திரனென்றுஞ் சொல்லப்படும்.

சீவன் தன் மூன்றவத்தையிலுந் தன் மூன்றுசரீரமா க இருக்கின்ற விருபத்தேழு தத்துவத்துடனும் ஒனெ ன்று கலந்துநிற்கின்றதுபோல வீசுரனுந்தம்முடையமூ ன்று சரீரமாயிருக்கின்ற முப்பத்திரண்டு தத்துவத்துட னும்மூன்றவத்தையிலுங்கலந்துநிற்பர்.

(உ-ம-வது) ஆகையினுற் சீவசிதாபாசன் தன் சரீரமா த்திரமே கலந்துநிற்பன்.

ஈசுரன் தம்முடைய சரீரமாகிய சகல சரீரங்களோடு ஞ் சகல பிரபஞ்சங்களோடுங் கலந்துநிற்பர்.

இந்த விருவகைக்குஞ் சாட்சியாயிருக்கின்ற பிரமசை தன்யஞ் சகல சரீரத்திலும் சகல பிரபஞ்சத்திலுநிறை ந்து, அப்பாலும் பத்துத்திக்கையும் அதிக்கிரமித்து, எல்லையற்றிருக்கும்.

(௨௧-வது) சீவனுக்குத் தூலசரீரவியவகாரத்துக்கு அன்னமயமான சட்கோசதத்துவம்-௬, சூட்சுமசரீரதத்துவம்-௨௰, சீவன்ஈசுரன், அவித்தை, வித்தை, பிரமம்-௫, ஆகதத்துவம்-௩௧.

சூட்சுமசரீரவியவகாரத்துக்குசூட்சுமசரீரதத்துவம்௨௰ சீவன், ஈசுரன், அவித்தை, வித்தை, பிரமம்-௫, ஆகதத்துவம்-௨௫.

காரணசரீர வியவகாரத்துக்கு சீவன், ஈசுரன், அவித்தை, வித்தை, பிரமம், ஆக-௫

சீவவியவகாரத்துக்குசீவன், ஈசுரன்பிரமம்ஆக-௩.

சாட்சி வியவகாரத்துக்கு சாட்சி-௧.

ஈசுரனுக்குத் தூலசரீரவியவகாரத்துச்குச் சமட்டி அன்னமயகோசதத்துவம்-௬, சமட்டிசூட்சுமசரீரதத்துவம் ௨௰, சமட்டி, சீவன், அவித்தை-௨, ஈசுரன்வித்தை, பிரமம்-௩, பூதம்-௫, ஆகத்தத்துவம்-௩௬.

சூட்சுமசரீர வியவகாரத்துக்குச் சமட்டி சூட்சுமசரீர தத்துவம்-௨௰, சமட்டி சீவன், அவித்தை-௨, சூட்சுமபூதம்-௫. ஈசுரன், வித்தை, பிரமம்-௩, ஆகதத்துவம்-௩௰.

காரணசரீர வியவகாரத்துக்கு ஈசுரன், வித்தை, பிரமம்-௩.

ஈசுரவியவகாரத்துக்கு ஈசுரன், பிரமம்-௨.

பிரமவியவகாரத்துக்கு பிரமம்-௧.

இந்திரியவியவகாரத்துக்கு இந்திரியம்-௧, சட்கோசதத்துவம்-௬, கரணம்-௫, வாயு-௫, சீவன், ஈசுரன், அவித்தை, வித்தை, பிரமம்-௫, ஆகத்தத்துவம்-௨௨.

மனோராச்சிய வியவகாரத்துக்குக் கரணம்-௫, சீவன், ஈசுரன், அவித்தை, வித்தை, பிரமம்-௫, ஆகத்தத்துவம்-௰.

இப்படித் தத்துவங்களினுடைய தோற்றமும்நிலையுஞ் சொல்லப்பட்டன.

(௨௨-வது) இனித் தத்துவமொடுங்குகின்ற வழிசொல்லுகிறோம்;—அதெங்ஙனமெனில்;—

சகல சீவர்களிடத்திலே இருக்கின்ற தூலசரீரங்களும் தமக்காதாரமான தூலபூதங்களுடனேமடிந்து, பூதமாத்திரமாகஒடுங்கும். இந்தத் தூலபூதங்களு பஞ்சீகரணம்விட்டுத் தன் மாத்திரையான தாமதகுணபூதங்களாகமிஞ்சும். அப்போது கேவலவிரணிய கர்ப்பாவத்தையென்று சொல்லப்படும்.

சூட்சுமசரீரம் இருபதுதத்துவமுங் கட்டுவிட்டுப்பூதங்களினுடைய சாத்வீகருணமும் இராசதருணமுமாகவொடுங்கும். அதெங்ஙனமென்னில். — சகலபிராணிகளிடத்திலு மிருக்கின்ற அகங்காரமும், ஆக்கிராணமும் உதானவாயுவும், உபந்தவிரீந்திரியமும், பிருதுவியிலொடுங்கும். சித்தமும், சிங்குவையும், சமானனும், பாயுருவும், அப்புவியிலொடுங்கும். புத்தியும், சட்சுவும், அபானனும், பாதமும், அக்னியிலொடுங்கும். மனதும், துவக்கும், பிராணனும், பாணியும், வாயுவிலொடுங்கும். தேயுசும், சுரோத்திரமும், வியானனும், வாக்கும், ஆகாசத்திலொடுங்கும்.

அப்போது பழையபடியே முக்குணபூதங்களாகும். இந்தச் சூட்சுமபூதங்களில், பிருதுவி அப்புவிற்கரைந்தொடுங்கும், அப்புவும் அக்கினியிற் சுவறியொடுங்கும். அக்கினியும்விளக்குப்போல வாயுவிலணைந்தொடுங்கும். வாயுவும் ஆகாசத்தி லோய்ந்தொடுங்கும். ஆகாசமும் விட்சேபசத்தியி லொடுங்கும். ஆவரணசத்தியும் விட்சேபசத்தியும் மூலப்பிரகிருதியின் தாமதகுணமாத்திரமாய் ஆலமரம் ஆலம்விரையி லொடுங்கிறதுபோல, இன்னம் ஒருசிருட்டிக்குவித்தாக மாயையிலும், அவித்தையிலும் ஒடுங்கும். அந்தமாயையும், அவித்தையும் அதிநுண்மையான மூலப்பிரகிருதி யென்றுசொல்லப்பட்ட விச

